# சரும பாக்டிரியாக்களை நரகத்திற்கு அனுப்ப சரியான வழியைக் காட்டுவீர்.



நீங்கள் வேனற்கட்டி, முகப்பரு, வியர்க்குரு, மற்றும் வியர்வை துர்நாற்றம் ஆகியவற்றிலிருந்து விலகி இருக்க முடியாது. ஆனால் அவற்றை கழுவிக் களைய முடியும். புதிய நிகோ உதவியாலே. இந்த சோப்பில் ஒரு திறம்வாய்ந்த பாக்டீரியா வளர்ச்சியைத் தடுக்கும் TCC கூடுதல் அளவில் அடங்கியுள்ளது. இது சருமத்தில் பாதுகாப்பு படலத்தை ஏற்படுத்தி சரும பிரச்சினைகளை உண்டாக்கும் பாக்டீரியாவை எதிர்த்து நிற்கிறது.

புதிய நிகோ புத்தம்புது மலர்க்கொத்தின் நறுமணத்துடனே. டாக்டர்களினால் பரிந்துரைக்கப்படுகிறது. மருந்துக் கடைகளில் கிடைக்கிறது. உங்கள் சருமத்திற்குப் பாதுகாப்பு.




ஸ்கின் 

# சுத்தமான உச்சரிப்பு: எப்படிக் கிடைத்தது டெலிவிஷன் வாய்ப்பு?

"ல, ள, ழ இவற்றை சரியாக உச்சரிக்கத் தெரிந்தும் கூடவா நீங்கள் நிகழ்ச்சித் தொகுப்பாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டீர்கள்?"

– இந்தக் கேள்வியை ரத்னாவிடம் கேட்டோம். இப்போது சன் டீ.வி.யில் செய்தி வாசிக்கிறார் என்றாலும் இவர் முதலில் நிகழ்ச்சித் தொகுப்பாளராகத் தான் டீவியில் நுழைந்தாராம்.

சிரித்தார். "பழங்காலப் பாடல்களை ஒளிபரப்பும் 'என்றும் இனிக்கும்' நிகழ்ச்சியின் தொகுப்புரையே கவிதை நடையில்தான் இருக்கும். அப்படிப் பேசும்போது உச்சரிப்புத் தவறாகவோ, ஆங்கிலம் கலந்தோ இருக்க வாய்ப் பில்லையே" என்கிறார் தனியார் நிறுவனமொன்றில் உதவி மானேஜராகப் பணிபுரியும் ரத்னா.

மற்றொரு தனியார் நிறுவனத்தில் சிஸ்டம்ஸ் மானேஜராகப் பணிபுரியும் கணவர் அரவிந்த், ரத்னாவின் செய்தி வாசிப்பைப் பற்றி என்ன கூறுகிறார்? "மைனஸா ஒண்ணும் சொல்றதுக்கில்லே. அதுவே ப்ளஸ்தான்."

கணவரின் கமெண்ட் இருக்கட்டும். சுயமதிப்பீடு எப்படி? "என் 'பேஸ் வாய்ஸ்' ஒரு சாதகமான விஷயம். சில செய்திகளை வேகமாகவும், சிலவற்றை மெதுவாகவும் படிக்கணும். இந்த விஷயத்தில் நான் கூடுதல் கவனம் செலுத்த ணும்னு தோணுது" என்றவர், திடீரென்று யாரையோ எண்ணி "ஆஹா, ஓஹோ" என்று வாய்விட்டுப் பாராட்டு வார்த்தைகளை உதிர்த்தார். அந்த 'யாரோ' ஷோபனா ரவி. "அது அல்லவா செய்தி வாசிப்பு. எப்படி வார்த் தைகளை மியூசிகலாக வழிய விடுகிறார்!"

இளையதலைமுறையைச் சேர்ந்த ரத்னா செய்தி வாசிக்கும் போது சுரிதார் அணியக்கூடாதா...? "அதென்னவோ செய்தி வாசிப்பாளர்னா காட்டன் சாரின்னு ஒரு எழுதப்படாத விதி இருக்குது" (பெண் வாசிப்பாளர்களைத்தான் குறிப்பிடுகிறார்!)

செய்தி வாசிப்பவர் பார்க்கும்படி இருக்க வேண்டியது அவசியம். அதே சமயம் அதீதமான மேக்கப்போ ஆடம்பரமான உடை மற்றும் நகை களோ கூடாது. பார்வையாளர்களின் கவனம், செய் திகளை மீறி செய்தி வாசிப்பவர் மீது பதிந்து விடக் கூடாது. எளிமையான அழகுதான் சின்னத்திரைக்குப் பொருத்தம். இதெல்லாம் ரத்னாவின் கருத்துக்கள்.

செய்தி வாசிப்பதில் என்ன பெரிய 'க்ரியேட்டி விடி' இருக்கிறது? "ஏன் கொடுக்கும் செய்தி களை மனத்தில் பதியும்படி அழகாக வாசிப்பது ஒரு கலையில்லையா?" என்று ஒரு சின்னக் கோபத்தோடு கேட்கிறார் ரத்னா.

- ஜி.எஸ்.எஸ்.

வண்ணப்படம் : யோகா



ஓர் அறுபது வருடங்களுக்கு முன்னால் டில்லிக்கோ, பம்பாய்க்கோ ரயிலேற சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனில் காத்துக் கொண்டிருந்த இளைஞர்களின் கையி லிருக்கும் டிரங்குப் பெட்டியை அதிரடியாகத் திறந்து பார்த்தால், அவற்றில் பாதியிலாவது பிட்மன் ஷார்ட்ஹேண்ட் புத்தகமும், சுருக் கெழுத்துத் தேர்ச்சிக்கான சர்ட்டிபிகேட்டு களும் நிச்சயம் இருந்திருக்கும்.

கூராகச் சீவிய பென்சிலும், கோடு போட்ட காகிதங்களுமாக உத்தியோக வாழ்க்கையை ஆரம்பித்த இவர்கள் அமைச்சரவைச் செய லாளர்களாகவோ, பெரிய நிறுவனங்களின் மேலாளர்களாகவோ ஓய்வு பெற்றதாகச் சரித் திரம் சொல்லும். அத்தனை பேரின் வெற்றிக் கும் பிள்ளையார் சுழி போட்டது சுருக்கெழுத் துத்தான்.

இருபதாம் நூற்றாண்டு முடியப் போகிற இந்தக் காலகட்டத்தில் சுருக்கெழுத்துக்கு என்னதான் மதிப்பு என்று தெரிந்து கொள்ள, சென்னை சுருக்கெழுத்தாளர் சங்கத்துக்கு ஒரு விசிட் அடித்தோம். தி. நகர் உஸ்மான் சாலை நகைக்கடை, ஜவுளிக்கடை, நடைபாதைக் கடை நெரிசலில் எதிர்நீச்சல் போட்டு சிவா விஷ்ணு கோயில் பின்புறத் தெருவில் சங்கக் கட்டடத்துக்குள் நுழைந்த போது, ராத்திரி எட்டு மணிக்குக் கூட ஏகப்பட்ட பரபரப்பு.

எழுபது நாளில் பயிற்சி தரும் சுருக் கெழுத்து வகுப்புக்களில் ஜீன்சுகளும் சுடி தார்களும் நிரம்பி வழிந்து கொண்டிருக்க, சிறிய சைஸ் கம்ப்யூட்டர் போர்டு போல எதையோ வைத்துத் தட்டிக் கொண் டிருந்த இளைஞர் நம் கவனத்தை ஈர்த் தார். மெதுவாகப் பேச்சுக் கொடுக்க முயன்ற போது, தோளில் ஒரு வலு வான கை வந்து விழுந்தது.

''மெஷின் ஷார்ட்ஹேண்ட் பயிற்சி செஞ்சுக்கிட்டு இருக்கிற வரைத் தொந்தரவு செய்யாதீங்க சார்... உங்களுக்கு அது என்னன்னு தெரியணும்... அவ்வளவுதானே...? நான் சொல்றேன், உட்காருங்க..''

சங்கத்தின் கமிட்டி உறுப்பினரான ரமேஷ் சொன்ன விவரங்கள் நம்மை வியப்பில் ஆழ்த்தியது நிஜம்.

கையால் எழுதப்படும் சம்பிரதாயமான சுருக்கெழுத்துக்கு இணையாகக் கருவி மூலம் சுருக்கெழுத்து உருவாக்கும் முயற்சிகள் போன நூற்றாண்டிலேயே துவங்கிவிட்டனவாம்! கிட்டத்தட்ட ஐம்பது கண்டுபிடிப்பாளர்கள் அங்கங்கே மெனக்கெட்டு வடிவமைத்த வற்றில், 1910 இல் வார்ட்ஸ்டோன் அயர் லாண்ட் உருவாக்கியதுதான் காலத்தை வென்று நிற்கிறது. இருபத்து நான்கு பொத் தான்கள் மட்டும் அமைந்த விசைப்பலகை யின் ஒன்றிரண்டு விசைகளை மட்டுமே தட்டி முழு வார்த்தைகளையோ, சொற்றொடர் களையோ காகிதச் சுருளில் சுருக்கெழுத்தில் பதிவு செய்ய முடியும் என்பதுதான் இந்தக் கருவியின் விசேஷம்.

சில ஆண்டுகளுக்கு முன் இந்தச் சுருக் கெழுத்துக் கருவியைக் கம்ப்யூட்டரில் இணைக்க வழி கண்டுபிடித்ததுதான் தாமதம்; மேல்நாடுகளிலும் சிங்கப்பூர், ஹாங்காங்கிலும் மெஷின் ஷார்ட்ஹேண்ட் படுவேகமாகப் பரவி வருகிறதாம். முக்கியமாக நீதிமன்றங் களிலும், நாடாளுமன்றங்களிலும், பெரிய நிறு வனங்களிலும் உடனுக்குடன் குறிப்பெடுத்து விரிவான அறிக்கைகள் தயாரிக்க.

இருக்காதா பின்னே? சண்டப்பிரசண்ட மாக ஆங்கிலத்தில் யாராவது சொற்பொழிவு செய்வதை இந்தக் கருவியில் தட்டிச் சுருக் கெழுத்தாகப் பதிவு செய்து கொண்டே போக, கருவி இணைக்கப்பட்ட கம்ப்யூட்டரில் உள்ள மென்பொருள் சடுதியில் அதைப் படித்து முழு வாக்கியங்களாகத் திரும்ப மாற்றிக் காத்தத் தகட்டில் எழுதிவிடும். வியர்த்த முகம் துடைத்தபடி பேச்சாளர் மேடையை விட்டு இறங்கும்போது அவர் பேச்சின் பிரிண்ட்-அவுட்டை நீட்டி விடலாம்!

# கம்ப்யூட்டரில் சுருக்கெழுத்து!




இந்த மே மாத இறுதியில்தான் சுருக்கெழுத்தாளர் சங்கத்துக்கு இந்தக் கருவி வரப் போகிறது என்றாலும், மாதிரிகளை வைத்து அதற்கான பயிற்சியை ஏற்கெனவே தொடங்கி விட்டதாகச் சொன்னார் ரமேஷ். ஆறு மாதப் பயிற்சிக்கான கட்டணம் எட்டாயிரம் ரூபாய்.

இந்தப் பயிற்சி முடிந்தவர்களுக்கு 'இன்டர்நேஷனல் கில்ட் ஆஃப் வெர்பாடிம் ரிப்போர்ட்டிங்' அமைப்பின் சான்றிதழ் வழங்கப்படும். அவர்கள் நிமிடத்துக்கு இருநூறு வார்த்தைகளுக்கு மேலும் வேகமான பேச்சுக்களைக் கூட சர்வசாதாரணமாக 'சுருக்' செய்யத் திறமை படைத்தவர்களாக இருப்பார்களாம்.

இந்தியாவிலேயே முதல் முறையாக இந்த மாதிரிப் பயிற்சி சென்னை சுருக்கெழுத்தாளர் சங்கத்தில்தான் தரப்படுகிறது என்றார் சங்கத்தின் கௌரவத் தலைவர் எஸ். வி. ராமசாமி. இந்தியன் வங்கியில் மூத்த அதிகாரியான ராமசாமி, "சுருக்கெழுத்தை ஒரு தொழில் என்று சொல்லவே மாட்டேன்" என்கிறார் பிடிவாதமாக.

"அது ஒரு கலை சார்" என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லும் இவருக்கு 1944 இல் ராஜாஜியின் தங்கக் கையால் தொடங்கி வைக்கப்பட்ட சங்கத்தின் வளர்ச்சி குறித்து ஏகப் பெருமை. மெஷின் ஷார்ட்ஹேண்ட் பயிற்சி பெற்றவர்களுக்கு வெளிநாடுகளில் ஏகப்பட்ட வேலை வாய்ப்புக்கள் இருப்பதாகவும் குறிப்பிட மறக்கவில்லை இவர்.

"எப்படியும் அவங்களுக்கு வேலை கிடைக்கும் என்கிற நம்பிக்கையில்தான், அப்படிக் கிடைக்கிறவரை மாதம் ஆயிரம் ரூபாய் உதவித் தொகை கூடத் தரப் போகிறோம்" என்றார். கையைக் கட்டிக் கொண்டு சும்மா உட்கார்ந்திருக்கவில்லையாம் அந்த ஸ்டைபண்ட். சுமார் ஒண்ணேகால் லட்சம் விலையுள்ள கம்ப்யூட்டர் சுருக்கெழுத்துக் கருவியை இங்கே பிரபலப்படுத்த சங்கத்துக்கு உதவி செய்யத்தான் அது.

"என்னதான் சொல்லுங்க... நேரடியாகக் குரலைக் கம்ப்யூட்டரில் பிராசஸ் செய்து எழுத்தாகப் பிரிண்ட் எடுக்கத் தொழில் நுட்பம் முன்னேறியுள்ள இந்தக் கம்ப்யூட்டர் யுகத்தில் சுருக்கெழுத்து தாக்குப் பிடிக்குமா?"

கேள்வியை நாம் முடிப்பதற்குள்ளாகவே 'தொப்'பென்று ஒரு தலையணை சைஸ் பேரேட்டை நமக்கு முன்னால் போட்டார் ராமசாமி.

"புரட்டிப் பாருங்க."

அத்தனையும் விலாசங்கள்.

"எல்லாம் இங்கே சுருக்கெழுத்துப் படிச்சவங்களா?" என்று அப்பாவித்தனமாக விசாரித்தோம்.

"நீங்க ஒண்ணு... சுருக்கெழுத்தாளர்கள் தேவையென்று எங்களிடம் கேட்டுக் காத்திருக்கும் கம்பெனிகளின் விலாசங்கள்தான் இதெல்லாம்..."

சுருக்கெழுத்துக்கு எதிர்காலம் இல்லையென்று யார் சொன்னது?

- அச்வின்

படம்: யோகா



# தேவை: ஒரு ச

"அக்கா! அக்கா! இங்க வந்து பாரேன், இந்த அநியாயத்தை!"

டி.வி பார்த்துக் கொண்டிருந்த சசிகலா அலறினார்.

அடுத்த அறையிலிருந்த ஜெ. சோபாவை விட்டு நகராமலே சோகக் குரலில், "நானும் என் கட்சியும் அஸ்திவாரத்தோட சரிந்ததை விட பெரிய அநியாயம் என்ன இருக்க முடியும், எதைப் பார்க்க நீ கூப்பிடறே!" என்று பெருமூச்சு விட்டார்.

"வருத்தப்படாதீங்க அக்கா! அதான், நாடு ¨பரு
தேர்ந்தெடுக்கப்பட்டிருக்காங்களே! திருநாவுக்கரசும் தாமரைக்கனியும் நம்ம கட்சி சார்பில் சட்ட சபையை ஒரு கலக்குக் கலக்கிடுவாங்க..." என்றார் சசிகலா ஆறுதலாக.

"அவுங்க பாவம், அங்க மாட்டிக்கிட்டு கேலிக்கும் பரிகாசத்துக்கும் ஆளாறதுக்குப் பதிலா, முன்ன மு.க வழிகாட்டின மாதிரி ராஜினாமா பண்ணிடலாம்."

"அதுக்கு அவசியம் இருக்காது, அக்கா! திருநாவுக்கரசுகிட்ட கண்ணியமாத்தான் சட்டசபைல நடந்துக்குவாங்க. அந்த அசடு கருணாநிதிதான், 'எங்களுக்கு வோட்டுப் போடாதவங்க நலனையும் இந்த அரசு கவனிக்கும்'னு டி.வி.ல உளறிக்

செம்பியன்

கொட்டியிருக்காரே!"

"யாரைக் கவனிக்கிறாங்களோ இல்லியோ, உன்னையும் என்னையும் நல்லாவே கவனிச்சுடுவாங்க போலிருக்கே!"

"அது நல்லதுக்குத்தானே அக்கா, இந்திரா காந்தி கிட்ட ஜனதா அரசு நடந்துக்கிட்ட மாதிரி நம்மையும் இப்ப மாநில, மத்திய அரசுகள் வாட்டி வதைச்சா, அனுதாப அலை நம்ம சார்பில உருவாகும். அடுத்த தேர்தல்ல, மறுபடி ஆட்சியைப் பிடிச்சுடலாம்!"

"டக்கரான ஐடியாதான். என் கண்ணே பட்டுடும் போலிருக்கு. ஆனா, இரைஞ்சு பேசாதே! கருணாநிதி காதுல விழுந்து வைச்சு, பழி வாங்காம இருந்துடப் போறாரு. அரெஸ்ட் வாரண்ட், பெய்ல் இல்லாத ஜெயில் அப்படி இப்படின்னாத்தான் அனுதாப அலை பொங்கும்."

"பயப்படாதீங்க அக்கா! அதான் 'சட்டம் தன் கடமையைச் செய்யும்'னு வாய்க்கு வாய் எல்லா தலைவருங்களுமே சொல்லிக்கிட்டுத் திரியறாங்களே! அதுக்கு ஏற்ற மாதிரிதான், இந்தாளு பதவிப் பிரமாணம் ஏற்கிறதுக்கு முந்தியே ஆதியையும் தினகரனையும் ஆஸ்பத்திரிலேர்ந்து கிளப்பி ஜெய்ல்ல தள்ளுறாங்க! அடுத்தாப்பல நம்மையும் தேடி வருவாங்க!"

"வரட்டும் வரட்டும், முந்தாணையையும்

# னுதாப அலை!

ரவிக்கையையும் கிழிச்சதா நாடகமாடாம போலீஸ் வேன்ல ஏறப் போறதில்லே! 'அக்கிரமம், அநியாயம்'னு அலறாம விடப்போறதில்லே! அது சரி, நீ என்னமோ 'அக்கிரம், அநியாயம்; வந்து பாருன்னியே, என்னது சசி?"

"நேத்து வரை எனக்கு சலாம் போட்டு என் நகைகளுக்குச் காவலா எனக்கு முன்னால் நடந்துக்கிட்டிருந்த தேவாரம், மீசை முறுக்கு குறையாமலே மு.க. முன்னால் நின்னு சல்யூட் அடிக்கிறாரு! டீ.வி.ல காட்டினாங்க!"

"அவர் மட்டுமா? எல்லா போலீஸ் உயர் அதிகாரிகளும்தான் லைன்னா மு.க. முன்னால் அட்டென்ஷன்ல நிற்பாங்க."

"அடப்பாவமே! அப்ப எனக்கு இனிமே போலீஸ் பாதுகாப்பே கிடைக்காதா? நான் தளையத் தளைய நகைகளை எல்லாம் போட்டுக்கிட்டு என்னிக்கி நடமாடறது?"

"என் வீட்டுக்கு முன்னால் இருந்த செக்யூரிட்டியே இருந்த இடம் தெரியலை; உனக்குப் பாதுகாப்பு கொடுக்க நான் யாரைப் போய்க் கேட்பேன். அதிகாரிங்க எல்லாருமே அப்படித்தான். யார் முதல்வரோ, யார் மந்திரியோ, அவங்களுக்குத்தான் கட்டுப்பட்டு கைகட்டி நிற்பாங்க."

"அதிகாரிங்களாவது எப்படியோ போகட்டும், அவங்க கடமையைச் செய்யறாங்க... உங்ககிட்ட சாகிற வரைக்கும் விசுவாசத்தோட இருப்பேன்னு சொன்ன வீரமணி இப்ப, 'மு.க.தான் தமிழகத்தை ஆளத் தகுதியானவர்'னு பேசுறாரே!"

"அதுதான் திராவிட இனம்!"

"அப்படீன்னா?"

"பார்ப்பனீயம் மாதிரின்னு வைச்சுக்கோயேன்! பார்ப்பனீயத்தை வெறுத்தாலும் பார்ப்பனர்களை வெறுக்க மாட்டார் கருணாநிதி. அது மாதிரியே தான், வீரமணியின் பச் சோந்தித்தனம் பிடிக்கலேன்னாலும் வீரமணியை அவருக்கு பிடிக்காமல் போகாது. ரெண்டு பேரும் நெருங்கி வந்துடுவாங்க."

"அவர் மட்டுமில்லே அக்கா!"

"இன்னும் யாரு?"

"உங்க வளர்ப்பு மகன் கல்யாணத்துக்கு நிலம் தந்து, காம்பவுண்டு சுவர் இடிச்சு, வசதி பண்ணிக் கொடுத்தாரே... கருணாநிதி தட்டிக் கேட்கப் போய், அவரோட வாதாடி வாங்கிக் கட்டிக்கிட்டாரே..."

"ஆமாம், அவருக்கென்ன?"

"அவருக்கு ஒண்ணுமில்லே, எல்லாரையும் முந்திக்கிட்டு அவர்தான் மு.கவுக்கு மணக்க மணக்க மாலை போட்டு வாழ்த்துச் சொல்லியிருந்தார்... இதுக்கெல்லாம் கருணாநிதி மயங்கிடுவாரா, அக்கா?"

"யாருக்குத் தெரியும்? நான் கூடத்தான் ஆரம்பத்துல புகழுக்கும் புகழ்ச்சிக்கும் மயங்கமாட்டேன்னு நினைச்சுக்கிட்டிருந்தேன்."

"அப்படின்னா ஒரு ஐடியா அக்கா!"

"என்ன?"

"நாமும் ஆளுக்கொரு ஆளுயரமாலையைத் தூக்கிக்கிட்டு கோபாலபுரம் போனா என்ன?"

# ஆட்டம் முடிவதற்குள் அனுபவியுங்கள்!




• இதுதான் பாதை... இங்கேதான் விபத்து!

ஒரு புதிய நட்சத்திரத்தால் உலகமே அழியப் போகிறது எனச் சில புராதன மெத்துவ ஏடுகளில் சொல்லப்பட்டிருக்கிறதாம். இதனை விஞ்ஞானிகளும் ஆமோதிக்கிறார்கள்!

'Rogue Star' என்று அந்த நட்சத்திரத்துக்குப் பெயர். இசகுபிசகாகப் பால் வீதியில் உலாவரத் தொடங்க, (சும்மா இல்லை... பூமியை விட ஐந்து மடங்கு பெரிசு!) இன்னும் நாலு வருஷத்தில் சூரியக் குடும்பத்தில் இதனால் குழப்பம் வரப் போகிறதாம்!

அதாவது கி.பி. 2000இல், சூரியனைச் சுற்றிவரும் பூமியின் டிராஃபிக் இல்லாத ஜி.எஸ்.டி. சாலையின் குறுக்கே, இந்த நட்சத்திரம் வந்து ஜம்மென்று உட்காரப் போகிறது.

இது, பூமியை மோதப் போவதில்லை... தனது அசாதாரண ஈர்ப்பு சக்தியால் பூமி ரயிலைத் தடம் புரளச் செய்யப் போகிறது என்று குண்டு போடுகிறார்கள் அமெரிக்க NASA விஞ்ஞானிகள்!



• மெல்டன்

பூமியை இந்த 'Worm Wood' (இது தான் சங்கேதப் பெயர்) நட்சத்திரம் நெருங்கும் நேரத்தில் நிலா சைஸுக்குக் காட்சி அளிக்கும். அதன் ஈர்ப்பு சக்தி காரணமாக பூமியில் நிலநடுக்கம், எரிமலை வெடிப்பு, புயல், பேரழிவு எல்லாம் வரும் என்கிறார் விஞ்ஞானி மெல்டன்.

இந்த நிலை தடுமாற்றத்தால் சூரியப் பாதையிலிருந்து பூமி பிரித்தெறியப்படும் என்கிறார்கள். அந்தச் சமயம் இதையெல்லாம் கண்டுகளிக்க(!) பூமியில் ஒரு ஜீவஜந்துவும் இருக்காது என்பது மெல்டனின் கணிப்பு.

இதுபற்றிய தீவிர ஆராய்ச்சியில் இருக்கிற விஞ்ஞானிகள், தடுப்பு நடவடிக்கைகளில் இறங்கி இருக்கிறார்கள் இப்போது.

எப்படி...?

சந்திர மண்டலத்தில் ஒரு மையம் நிறுவி, அங்கிருந்து அணு ஆயுதங்களை (ஏவுகணைகளை) அனுப்பி 'வொர்ம் வுட்'டை வீழ்த்தும் திட்டம்!

"நல்லவேளை. 'Worm Wood' சூரியன் அளவுக்கு ஆற்றலுள்ள நட்சத்திரமில்லை. எரிசக்தி (எரிக்கும் சக்தி?) குறைவான 'ஜுபிடர்', சனி போன்றதுதான். எனவே, தற்காப்பு முயற்சி பலன் தரும்" என்று எதிர்பார்க்கிறார்கள்.

கொஞ்ச நாட்களாகவே இந்த விஷயம் விஞ்ஞானிகளுக்குத் தெரிந்து, ஆராய்ச்சி நடந்து கொண்டுதான் வந்திருக்கிறது. வெளியே தெரியாமல் ரகசியமாக வைத்திருந்திருக்கிறார்கள். இப்போது வெட்டவெளிச்!

என்னதான் தடுப்பு நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன என்ற போதிலும் அடி மனசில் ஒரு சின்ன பய ஊசி நமநமவென்று குடையத் தொடங்கி இருக்கிறது இல்லையா?

எதற்கும் என்னென்ன பாக்கியோ, அனுபவித்து விடுங்கள்!

- எஸ். சந்திரமௌலி

ஆதாரம் : நியூபேப்பர்

# T.S.S. NIDHI LTD. ESTD 1973



## THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED

Regd. Off.: 230, R.K. Mutt Road, Mylapore, Madras - 600 004 Ph.4942303/4943365

BRANCHES
- THIRUVANMIYUR : 112, Thiruvalluvar Salai, Kamaraj Nagar, Madras-41 Ph. 410058
- TONDIARPET : 667, T.H.Road, Madras-81 Ph.5950472
- SAIDAPET : 11, Jones Road, Madras, -15 Ph.4851468

## FIXED DEPOSIT SCHEME

| Period (Months) | 12 | 24 | 36 | 60 |
|---|---|---|---|---|
| Rate of Int. P.A. | 17% | 18% | 19% | 20% |

## KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

(Re-Investment Plan) For Deposit of **Rs.1,000/-**

| Period (Months) | 12 | 24 | 36 | 45 | 67 |
|---|---|---|---|---|---|
| Maturity Value Rs. | 1190 | 1425 | 1760 | 2025 | 3025 |

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME

Minimum Deposit **Rs.10,000/-**

Period **12 Months**

Interest payable Monthly **19.5%** p.a

Interest payable Annually **21%** p.a

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, REGD. EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS)

## T.S.S. SPECIAL DEPOSIT SCHEME

For Deposit of Rs.10,000/-

| Period (Months) | Maturity Value |
|---|---|
| 120 | Rs.66,000 |
| 180 | Rs.1,82,000 |

## RECURRING DEPOSIT SCHEME

### MONTHLY DEPOSIT RS.100/-

| Period in Months | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
|---|---|---|---|---|---|---|
| Maturity Value Rs. | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

## SAVINGS DEPOSIT SCHEME 9% P.A.

## BUSINESS HOURS

| | Week Days | | Sunday | Holiday |
|---|---|---|---|---|
| Regd. Office Mylapore | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Friday |
| Branch Offices | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Tuesday |

## HIGHLIGHTS

* Recognised as a NIDHI COMPANY by Central Government of India.
* **Company is in 23rd year of service.**
* Transaction with members only. (Rupees two only for membership)
* Premature repayment facility as per terms and conditions.
* Monthly interest Warrants would be despatched in advance for the year of Deposits.

## LOANS

A) Jewel loans granted on Gold ornaments at Rs.300/- per gm. (Rs.2400/- per 8 gms.)

* No Ceiling
* No Charges
* No Interest Tax
* Recurring Deposit not required
* **Your Jewels are insured at our cost.**

B) Property Mortgage Loans granted on RD basis within Madras city limits.

**P.S. SAMBASIVAM**
Secretary

**G.KUMARAVELU**
Vice-President

**K.R.V. RAMANI**
President

# ஆகாயச் சிறகுகள் 7

மேலாண்மை பொன்னுச்சாமி

கீழக்காட்டில் பருத்திப் புஞ்சையை சுற்றிப் பார்த்தான், பால்ச்சாமி. பருத்திச் செடிகள் முழுங்கால் உயரத்திற்கும் மேல். கனிந்த பச்சை நிறக் கடலாய்... செடிகளின் அடர்த்தி. வெள்ளைப் பூக்களும், ரோஸ் கலர் பூக்களும் ஜில்லென்று பூத்திருந்தன. வெள்ளைப் பூக்கள் ஆண். மகரந்தத்தைத் தந்து விட்டு உதிர்ந்து விடும். ரோஸ் கலர்ப் பூக்கள்தான், பெண். காம்பு சுருங்கிப் பிஞ்சாகும்.

இளம் பிஞ்சுகள் ஒவ்வொரு செடிக் கடியிலும் உதிர்ந்து கிடந்தன. பிஞ்சை எடுத்துப் பிய்த்துப் பார்த்தால்... அதற்குள் புழு. உள்ளிருந்து வீழ்த்தியது ரோகப்புழு. பிஞ்சுகளை மட்டுமல்ல, சம்சாரிகளின் கனவுகளையும், வாழ்க்கையையும் வீழ்த்துகிற புழு. அடிக்கிற பூச்சிக் கொல்லி மருந்துகளின் விஷத்தையெல்லாம் குடித்துக் குடித்துக் கொழுத்துப் போன புழு.

'வேப்பெண்ணெயில் சோப்பு கரைத்துத் தெளிக்கணும்' என்று நினைத்துக் கொண்டான். மனசில் பலபல யோசனைகள். விவசாயச் செலவுகள் குறித்த நினைவுகள்.

சைக்கிளை எடுத்துக் கொண்டு மேலக் காட்டுக்குப் போனான். எல்லாப் புஞ்சைகளையும் சுற்றிப் பார்த்துவிட்டுப் புறப்பட்டான். புது சைக்கிள். ப்ரீவீலின் சுழலிரைச்சல் மனசுக்குச் சுகமாக இருக்கிறது.

தியேட்டரில் கமல் படம். 'பதினாறு வயதினிலே'. சரட்டானை அடிப்பதைக் கூட காணச் சகிக்காத சப்பாணி... அன்பின் தீவிரத்தில் ஒரு கொலையே செய்கிற படம். 'வீரத்தின் விளைநிலமே ஈரமனசுதான்' என்பதை உணர்த்துகிற படம். 'வாடிய பயிர் கண்டு வாடுகிற' அன்பின் நெகிழ்வு மனிதகுல சமத்துவ நல்வாழ்வுக்குத் தடையாக இருக்கிற மனிதப் பதர்களை வீழ்த்துகிற புரட்சியாகப் பரிணமிக்கிறது என்கிற மகத்தான சமூகவியலை உணர்த்துகிற படம்.

பிரேமாவை கூட்டிக் கொண்டு போகணும்.

சாயங்கால வெயில். மணி பார்த்தான். 3.45. சுள்ளென்று அறைகிற வெயில். கன்னக் கதுப்பில் வெயிலின் தீத்தீண்டல்.

ஆகாயத்தைப் பார்த்தான். வெளிர் நீலமாய் விரிந்து கிடந்த வானம். சூரியப் பிரகாசத்தில் பயந்து முகம் வெளுத்துப் போன ஆகாயம். மேகங்கள் அவ்வளவாயில்லை. தூக்கியெறிந்த ராட்சஸ நாணற் கதிர்களாய் சில மேகங்கள்.

காடுகளில் மேய்கிற செம்மறியாடுகள். பாதையோரத்தில் ஆட்டுக்காரன். ரொம்ப வினோதத்தோற்றம். அண்-டிராயர் தெரிய சுருட்டி மடக்கிய கைலி. பச்சை பனியன். அதிலும் சில கிழிசல். இடுப்பில் இறுக்கமாய்க் கட்டியிருந்த துண்டில், வெறும் தூக்குச்சட்டி கிலுசிலுத்தது. கம்பை சாய்வாக ஊன்றி, அதன் மேல் கட்கத்தைப் போட்டு, ஒற்றைக்காலில் முழு உடம்புப்பாரத்தையும் அதன்மேல் போட்டு... கிருஷ்ணபரமாத்மா மாதிரி நின்றான். குருட்டாம் போக்கில் 'விர் விர்ர்'ரென்று சீறுகிற கற்கள். ஆடுகளை வைகிற கெட்ட வார்த்தைகள்...

வீட்டின் முன்–

வேப்ப மரம். அதன் அடியில் சைக்கிளை நிறுத்தினான். ஸ்டாண்டின் கிளிப்பைத் தட்டுகிற சத்தத்தில் கணவனை உணர்ந்து... வெளியே வந்து எட்டிப் பார்த்தாள், பிரேமா.

"தூரவா போயிருந்தீக?"

"புஞ்சைகளுக்குப் போயிருந்தேன்..."

"வெள்ளாமை எப்படியிருக்கு?"

"பொதுவாயிருக்கு. பருத்திக்கு மருந்தடிக்கணும். மிளகாய்ச் செடிக்கு களைவெட்டணும்."

"டீயிருக்கு. தரட்டா?"

"ம்."

சேரில் உட்கார்ந்தான், பால்ச்சாமி. புன்னகையோடு அடுப்பங்கரைக்குள் நுழைகிற பிரேமாவை விரட்டுகிற பார்வை. குளித்திருந்தாள். உடுத்தியிருந்த சேலையின் சலவை மணம், ஈரக்கூந்தலின் கரும்மின்னல். தளர்ந்து தொங்கிய கூந்தலின் நுனியில் போட்ட முடிச்சு. அதிலும் நீர் இறங்கித் தேங்கியிருந்த நீர்த் துளியின் கனிவு. கறுத்த முகத்தில் பூசியிருந்த மஞ்சளின் பசுந்திட்டு. கன்னக் கதுப்புகளிலும், குவிந்தமைந்த உதடுகளிலும் ஈர ஜொலிப்பு.

அவனுக்குள் துடிக்கிற ஆவி. ஆவி சேர்த்து அணைத்து, குறும்பு விளையாட்டு விளையாட

தாகமெடுக்கிற உயிர்.

"செத்த கட்டைவைத்தான் பாப்பீக."

அவனை அச்சுறுத்திக் கட்டுப்படுத்திய அவனது வார்த்தைகள். வைராக்யச் சொற்கள். டீயோடு கிளாஸை நீட்டினாள். அவள் உள்ளங் கைகளிலும் மஞ்சளின் பசுமைப்படர்வு.

அவள் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். டீயை குடிக்கிறான். கண்களில் கனத்து நிற்கிற வேதனை உணர்ச்சி.

'இவனுக்கா... எந்தங்கச்சி?' என்று 'தங்கு, புங்'கென்று தரைக்கும் கூரைக்குமாகக் குதித்த அண்ணன். 'ஊரு, கட்சி என்றுதான் அலையத் தெரியும். இந்த ஆளுக்கு காடுகரைகளைக் கவனிச்சு நடத்த முடியுமா? தெரியுமா?' என்று ஆங்காரமாய் கேள்வி கேட்ட அண்ணன்.

அண்ணனின் கணக்குகளையெல்லாம் பொய்யாக்கிக் காட்டிய புருஷன். ரெண்டே மாசத்தில் விவசாயத்தையும், கட்சியையும் கவனித்துக் கொள்கிற தீவிரம். வீட்டையும் நாட்டையும் வேறுவேறாகப் பார்க்காமல்... ரெண்டு பணிகளையும் ரெண்டு கைகளாகக் கொண்டு செயல்படுகிற சுறுசுறுப்பு.

அவள் மனசில் பொங்கித் ததும்புகிற பெருமிதம். உள்ளுக்குள் பீறிட்டு, முகத்தில் பூரிப்பு மலர்களாக ஒளி சிந்துகிற உவகை.

அவன் கண்களில் கரந்து திரண்டு துளியாக நிற்கிற வருத்தம்.

"ஏங்க... ஒரு மாதிரியாயிருக்கீக?"

''ம்ள்ச்சு... ஒண்ணுமில்லே...'' என்று வேதனையாகச் சூள் கொட்டினான்.



"சொல்லுங்களேன்... நா என்ன அந்நியமா?"

"வருத்தமே... அதுதானே?"

"எது?"

"நாம இன்னும் அந்நியோன்யமா ஆகலேங் குறதுதா."

ஏதோ குற்றம் செய்துவிட்டவனைப் போன்று சற்றே வாடிய முகத்துடன் அவனைப் பார்த்தாள்.

"அம்மா, அப்பா இல்லே. நாம மட்டும் தனியா குடியிருக்கோம். புதுசா கல்யாணமான எளசுக. எனசுக மாதிரியாயிருக்கோம்? ஒரு விளையாட்டு? ஒரு குறும்பு? ஒரு செல்லக் கோபம்? ஒரு கோபச் சிணுங்கல்? ம்ஹூம்! ரெண்டு மிஷின்கள் விதிப்படி குடும்பம் நடத் துற மாதிரியிருக்கு... நம்ம தாம்பத்யம்."

அவளுக்குள் புழுக்களாய் கடிக்கிற மிரட்சி. மாட்டிக் கொண்ட திருடியாக குற்ற உணர்வு டன் விழித்தாள். உள்ளூர நடுக்கம். மனக் கிலியில் கண்கள் பேந்தப் பேந்த விழித்தன.

"சரி... சினிமாவுக்குப் போவமா?"

"ம்... என்ன சினிமா?" உயிரறுந்த குரலின் நடுக்க அதிர்வு.

"பழைய படம். பதினாறு வயதினிலே..."

"ஸ்ரீதேவி குடுத்த (நடித்த) படமா?"

"ஆமா."

"ம்... போவம்..."

"சரி... சோறு வை. சாப்புட்டுப் போவம்..."

"எப்ப? இப்பவேயா?"

"ஆமா. மொத ஷோவுக்கு."

"தெருவெல்லாம் ஆள்களா இருப்பாக இல்லே?"

பயந்த தொனியில் அவள். உள்மிரட்டலாக இவன்.

"இருந்தா என்ன? வெடிகுண்டு வீசி அவுகளை வெரட்டணுமா? நீயும் நானும் கள்ள ஜோடியா? யாரும் பார்க்காம, நாம ஒளிஞ்சு ஒளிஞ்சு போவணுமா?"

"இல்லே..வந்து..."

"பிரேமா, கூச்சப்படுறதுக்கும் அளவு இருக்கு... எதுவுமே அளவு மீறுனா... அபத்தம் தான்." கண்டிப்பான குரலில் பால்ச்சாமி.

"ரெண்டாவது ஷோவுக்குப் போவமே..."

அச்சத்தில் நனைந்த கெஞ்சல். பயப்பட படப்பு. அவளது பயந்த மறுப்பு கூட பால்ச் சாமிக்குள் நெருப்பாகப் பாய... கொதித்துப் போய்ப் பார்த்தான்.

வழக்கத்திற்கு விரோதமாக- அதிசயமாக- கிட்டத்தில் வந்தாள். நெருக்கமாய் நின்று.... குழைந்த கனிவோடு அவனது கன்னத்தை வருடினாள். "ஐயா... ராசா இல்லே...? எஞ்செல் லம் இல்லே?"

அவனுள் புல்லரிப்பு. பயத்தில் 'மாறிய' அவளது அதிசய நெருக்கம். பரவசமாகிப் போய்... குபீரென்று சிரித்து விட்டான்.

"சரி' என்றான். பாலாய்ப் பொங்குகிற அவளது மகிழ்ச்சியில் மகிழ்ந்தான், பால்ச்சாமி.

**கா**லைக் கரண்டு. சைக்கிளை எடுத்துக் கொண்டு வேகமாய் புறப்பட்டான், குளிக்க. நிமிஷக் கணக்கில் குளித்துவிட்டு ஈரக்கைலியை மடித்து இடுப்பில் கட்டிக் கொண்டு வந்தான்.

இன்றைக்குக் கட்சிப் பேரவைக் கூட்டம். மாநிலச் செயற்குழு உறுப்பினர் வருகிறார். அதற்கான ஏற்பாடுகளை நேற்றே செய்தாகி விட்டது.

வீட்டின் பின்னாலுள்ள கொல்லைப் புறத்தில் கைலியைக் காயப்போட்டான்.

"வேட்டி எடுத்து வைக்கவா...?"

பிரேமாவின் சத்தம். அடுப்பங்கரைக்குள் புகையோடு அல்லாடுகிறாள் என்பது அவளது குரலின் கரகரப்பிலேயே தெரிந்தது.

"எடுத்து வை."

"சட்டை.... எந்தச் சட்டை எடுத்து வைக் கணும்? சந்தனக் கலரா, பொடிக் கட்டமா?"

காலில் சக்கரம் கட்டியவனாகப் பரபரத் தான். வீட்டுக்குள் ஓடி வந்தான், வெறும் டிராயருடன். தலையில் எண்ணெய் வைத் தான். பனியனைப் போட்டுக் கொண்டு.. கண் ணாடி பார்த்து தலைவாரிக் கொண்டான்.

"என்ன இது...?"

"ஏம்... பிரேமா?"

"இப்படியா... அண்-டிராயரோட இருக் குறது?"

"நாமதானே இருக்கோம்?"

---

**அ**லெக்ஸாண்டர் உலகத்தை வெல்லப் புறப்பட்ட போது தம் சொத்துகள் அனைத்தையும் நண்பர்களுக்கு அளித்தார். ஒருவர் "எல்லாவற்றையும் கொடுத்து விட்டால் உங்களுக்கு மீதம் என்ன இருக்கும்?" என்று கேட்டார். அதற்கு அலெக்ஸாண்டர் "நம்பிக்கை" என்றார்!"

– எஸ். விஜயா சீனிவாசன்

"யாராச்சும் உங்களைத் தேடிக்கிட்டு 'திடுதிப்பு'ன்னு வந்துட்டா? உங்களை இந்த நெலையிலே பாத்தா... என்ன நெனைப்பாக?"

"நம்ம வீட்லேபோலத்தான்... எல்லா வீட்லேயும்'னு நெனைச்சுக்குவாக..."

வேட்டியை எடுத்துக் கட்டினான்.

"சாப்புட்டுக்கிடுதீகளா?"

"ம்.... ரெடியாயிருச்சா?"

"உங்களுக்கு டயமாச்சா?"

"போகணும்..."

சோறு வைத்தாள். வட்டிலில் ஆவி பறந்தது. ஃபேனை தட்டி விட்டாள். உட்கார்ந்து அவசர அவசரமாய்ச் சாப்பிட்டான். அந்த வேகத்திலும் சுபாவப்படி பாராட்டத் தவறவில்லை.

"ஏய்.. ஒங் கையிலே ஏதாச்சும் மந்திரம் கிந்திரம் வைச்சிருக்கியா?"

"என்ன...ங்க?"

"சாம்பார்லே தாளிச்ச வாசம் 'கம்ம்'னு ஆளைத் தூக்குதே..."

"பக்குவந்தான்..."

"ரொம்ப டேஸ்ட்டாயிருக்கே."

"எல்லாம்... மல்லிச்செடி மகிமைதான்..."

சட்டையை மாட்டி விட்டான். ஹேண்ட் பாக்கை சைக்கிளில் மாட்டினான். செருப்பை மாட்ட வீட்டுக்குள் வந்தான்.

வாசலில் நின்றாள் பிரேமா, வழியனுப்ப.

அவன் பார்வையில் ஒரு கள்ளத்தனம். கண்ணில் பதுங்கிச் சிரிக்கிற குறும்பு.

"கொஞ்சம் தண்ணி கொடு" என்றான். அவள் கள்ளத்தனத்தை மனசால் உணர்ந்த குறுநகையோடு...

"தாகமில்லாமல் தண்ணியா?"

"தாகம் இருக்கு."

கிளாஸுடன் அடுப்பங்கரைக்குள் நுழைந்தவளை வாசலை மறித்துக் கொண்டு இவன். அவளை ஒட்டிக்கொண்டு பின்னால் நின்றான். இடுப்பில் கை போட்டான்.

"இதுதான் தாகமா?"

"ம்."

இலேசாகத் திரும்பிய அவள் கன்னத்தில் முத்தமிட்டான். அவளைத் திருப்பி.. ரெண்டு கன்னத்திலும்...

"ஐயய்யே... வேர்வையாயிருக்கு. விடுங்க.... விடுங்க."

பொய்யான அருவையுடன் விலகினாள். அவன் முகத்தில் கோணல்கள்.

"என்னாச்சு?"

"முத்தம்னா... இனிக்கும்லே? இதென்ன... உப்புக் கரிக்குது?"

"ச்சேய்... நீங்க ரொம்ப மோசம்."

செல்லச் சிணுங்கலாக அவள் கோபிக்க... இவனுக்குள் ஆயிரம் பூக்கள் பூத்த சந்தோஷம். புறப்பட்டான்.

(தொடரும்)



# படகோட்டி

ஆற்றோரம்
வாடிக்கையாய்ப் படகோட்டி.
அக்கரைக்கு ஆறுபணம்
அவன் பாட்டுக்கே ஈடாகும்.
பயணமங்கு இலவசம்தான்.
காதல் பாட்டெல்லாம்
இன்றும்
காற்றோடு கலந்துவரும்.

இக்கரையில்
துடிப்போடு அவனிருக்க
துடிப்போடு வந்து கேட்டேன்,
'படகோட்டியே
வழக்கமாய்த் தருகின்ற
ஆறுபணம் நாளைக்கு
வேண்டுமெனில்
பாட்டை நிறுத்திவிட்டுப்
படகைச் செலுத்திவிடு.
அக்கரையில்
எனக்காக கண்ணம்மா
இருந்திருந்து பார்த்திடுவாள்.
காதல் இருந்தளவு
காச இருந்ததில்லை.

துடிப்பிற்கு மருந்திடவே
துடுப்புக்குக் கைகொடுத்தான்.
பணமும் கேட்கவில்லை
பாட்டையும் நிறுத்தவில்லை.
அக்கரையில்
கால்வைத்த ஈரமோடு
காதோரம் சொன்னான்.
'எனக்கும்
ஒரு கண்ணம்மா
இருட்டுக்கு முன் வருவாள்.'

– சாரதா நாகரத்தினம்

# நடராஜ் எஸ்டேட்ஸ்



வழங்கும், ஈடு இணையற்ற லாபகர திட்டம்
(சென்னை நகருக்கு மட்டும்)



## வாரம் தோறும் காய்கறிகள்

உங்கள் இல்லம் தேடி வருகிறது

தினசரி காய்கறி வாங்கறது பெரிய சமாச்சாரமா இருக்கும் போலிருக்கே?

பெரிய சமாச்சாரமும் இல்லே சின்னச் சமாச்சாரமும் இல்லே நடராஜ் எஸ்டேட்ஸ்ஸிலே போய் மெம்பர் ஆயிட்டு வாங்கோ. அப்புறம் பாருங்கோ... காய்கறிக்கு பஞ்சமே இருக்காது

Ariya Perumpakkam Village, (Survey No : 444/1 to 461/30)

### காய்கறி விபரம்

தக்காளி, வெண்டைக்காய், கத்தரிக்காய், வாழைக்காய், புடலங்காய், அவரைக்காய், பாகற்காய், பீர்க்கங்காய், கண்டைக்காய், சுரைக்காய், பூசணிக்காய், பரங்கிக்காய், கொத்தவரங்காய், முருங்கைக்காய், முள்ளங்கி, இஞ்சி, கொத்துமல்லி, கறிவேப்பிலை, மற்றும் கீரை வகைகளும் மாற்றி மாற்றி சப்ளை செய்யப்படும். அத்துடன் கேரட், பீட்ரூட், கோஸ், உருளைக்கிழங்கு, வெங்காயம் போன்றவைகளும் சப்ளை செய்யப்படும்.

- வாரம் ஒருமுறை சப்ளை வேண்டுவோர் ரூ.5000/= செலுத்தி 3 வருடங்களுக்கு மெம்பர் ஆக வேண்டும்.
- வாரம் இருமுறை சப்ளை வேண்டுவோர் ரூ.10,000/-செலுத்தி 3 வருடங்களுக்கு மெம்பர் ஆக வேண்டும்.
- 3 வருடங்களுக்குப் பிறகு மீண்டும் ரினிவல் செய்து கொள்ளலாம். அல்லது திரும்ப பெற்றுக் கொள்ளலாம்.
- உங்கள் மெம்பர்ஷிப் கட்டணத்திற்கு 12% வட்டியும் உண்டு.
- சப்ளை செய்யப்படும் காய்கறிகளுக்காக நீங்கள் தனியே பணம் எதுவும் கொடுக்க வேண்டியதில்லை.
- ஒவ்வொரு முறையும் சப்ளை செய்யப்படும் காய்கறிகளின் மதிப்பு ரூ.50/- சராசரி.
- இலவசம் - காய்கறி நறுக்கும் S.S.கட்டர் மற்றும் நடராஜ் பதிப்பகத்தின் வெளியீடு ஒன்று.

## NATARAJ ESTATES

"Shanthi Complex", 3rd Floor, 26. Ranganathan Street, T. Nagar, Madras - 600 017.

*Branches : Tiruvarur, Thanjavur, Kancheepuram, Pudukottai, Bangalore.*

**Phone : 4342098, 4840150**



NATARAJ GROUP OF COMPANIES
Nataraj Finance & Investments
Nataraj Chits (Tamilnadu) Pvt. Ltd.,
Nataraj Exports overseas, Nataraj Publications,
Nataraj Oil Mills, T.K. Geetha Agro Products.

**24% P.A.**

# சுஜாதா பக்கம்



பிரிட்டிஷ் கவுன்சில் நூலகத்தில் 'இந்தியா நூறு வருஷத்துக்கு முன்' என்கிற மறு பதிப்புப் புத்தகம் இருக்கிறது. டபிள்யு உர்விக் (W. Urwick) என்னும் பாதிரியார் எழுதியது. சீரங்கம், திருவானைக்கா, திருச்சி, சிதம்பரம், மாகாபலிபுரம் போன்ற இடங்களின் நூறு வருஷத்துக்கு முந்தைய தோற்றத்தின் வர்ணனை கிடைக்கிறது. சில அரிய வுட்-கட் போன்ற படங்களும் பிரமிக்க வைக்கின்றன. சீரங்கம் கோயிலின் ஆயிரங்கால் மண்டபத்தையும் சேஷராயர் மண்டபத்தையும் வர்ணித்துவிட்டு வேல்ஸ் இளவரசர் 1875-ல் இந்தியா விஜயத்தின் போது இங்கு வந்திருந்து கோபுரத்தின் மேல் ஏறினதையும் ஐந்நூறு ரூபாய் கோயிலுக்கு அளித்ததையும் சொல்லியிருக்கிறார்.

அதன் பின் வருகிறது ஓர் அதிர்ச்சி: "கோயிலின் பிரம்மாண்டமும் பெருமையும் அதன் பிராகாரங்களின் விஸ்தாரமும் ஆயிரக்கணக்கான தொழிலாளிகளின் திறமையையும் வருஷக் கணக்கான உழைப்பையும் காட்டும் போது இதற்கு ஏறுமாறாக உள்ளே ஒளியிழந்த இருட்டில் எண்ணெய் வழியும் அச்சம் தரும்* பிம்பம் மிக விநோதமாக நம்மைத் தாக்குகிறது. வெறுக்கத்தக்க, மோசமான உருவவழிபாட்டுக்கு உலகிலேயே விஸ்தாரமான ஒரு கோவில் அமைப்பு எழுப்பப்பட்டுள்ளது."

லண்டனில் வெளியிடப்பட்ட இந்தப் புத்தகம் நம்மை ஆண்ட வெள்ளைக்காரர்கள் எத்தனை தப்பாக, விபரீதமாக நம் முறைகளையும் விக்கிரக வழிபாட்டையும் புரிந்து கொண்டார்கள் என்பதற்குச் சரியான சாட்சி.

மேலை நாட்டு ஆராய்ச்சியாளர்களோ மத இயலாளர்களோ ஒரு பொழுதும் நம் திருத்தலங்களின் வழிமுறைகளை முழுவதும் புரிந்து கொள்ள முடியாது. அவர்களுக்கு விளக்கிச் சொல்வது விரயம். எப்படி நம்மால் அவர்கள் 'ஒப்பெரா' சங்கீதத்தை ஒரு அளவுக்கு மேல் புரிந்து கொள்ள முடியாதோ அதுபோல்.

"நந்தா விளக்கே · அளத்தற்கரியாய் நரநாரணனே கருமாமுகில் போல் எந்தாய்" என்று திருமங்கையாழ்வார் திருநாங்கூரின் கருவறையின் இருட்டில் பாடியதன் உருக்கத்தை எப்படி பாதிரிமார்களுக்கு விளக்க முடியும்? நம் வழிபாட்டு வெளிப்புற அடையாளங்களுக்கு அப்பாற்பட்டது என்பது மத மாற்ற அவசரத்தில் இருந்தவர்களுக்குப் புரிந்ததே இல்லை.

ஸ்ரீரங்கம் உயர்நிலைப் பள்ளி, நூற்றாண்டு விழா கொண்டாடி விட்டது. மற்ற பள்ளிகளைப் போல் வியாபார நோக்கம் முக்கியமாகக் கொண்டிருந்தால் இந்தப் பள்ளி பல்கிப் பெருகி ஒரு பல்கலைக்கழகமாகியிருக்கும். மாறாக ஒரே ஒரு 386 கம்ப்யூட்டர் இப்போதுதான் தலைகாட்டத் துவங்கியுள்ளது. அதை வலுவாக்கி இண்டர்நெட்டுடன் இணைத்தால் முன்னேற்றத்தில் ஒருதாவு தாவலாம்.

விழாவில் நான் முக்கியமாகச் சொன்னது, "நோற்ற நோன்பிலேன் நுண்ணறிவிலே"னாகிய அடியேன் இந்தப் பள்ளியில் படித்த போது ஆல் இண்டியா ரேடியோ சிறுவர் நிகழ்ச்சிக்குக் கிடைத்த ஒரே ஒரு கதர்த் துண்டைத் தவிர வேறு எவ்விதக் கோப்பைகளோ, பரிசுகளோ பெறாமல், ஒரு சராசரி மாணவனாகத்தான் ஆசிரியர்களுக்குப் பயந்து கொண்டு இருந்தேன். எல்லாப் பாடங்களும் தமிழில்தான் படித்தேன். இங்கிலீஷ் உட்பட சௌரிராஜ அய்யங்கார் தமிழில்தான் சொல்லித் தருவார். அதனால் பிற்காலத்தில் ஏதும் இழப்பு என் வாழ்வில் ஏற்பட்டு விட்டதாகத் தெரியவில்லை. தேவைப்பட்ட போது தேவைப்பட்ட அளவுக்கு ஆங்கிலம் கற்று என்னால் வாழ்வில் ஓரளவுக்கு முன்னேற முடிந்திருக்கிறது. இதற்கு முக்கிய காரணமாக நான் தமிழில் படித்ததையும் சொல்வேன். தாய்மொழியில் படித்ததால் அடிப்படையாக என் மனத்தில் மழுப்பலும் குழப்பமுமில்லாமல் பாடங்களைப் புரிந்து கொள்ள அறிவு விதைக்கப் பட்டதாகச் சொல்வேன்.

தாய்மொழியில் புத்தகங்கள் இல்லை; தாய்மொழியில் படித்தால் வாய்ப்புகள் இல்லை எனச் சொல்லி ஆங்கில மோகத்தை நம் இளைஞர்களிடம் வளர்த்தது சுதந்தர இந்தியாவின் மிகப் பெரிய மோசடி. அதனால் நாம் எவ்வளவு இழந்திருக்கிறோம் என்பதை ஜப்பானியரையும் சீனா, கொரியா தேசத்தவர்களையும் பார்த்தால்தான் புரியும்.

(மீண்டும் அடுத்த வாரம்)

* hideous என்கிற வார்த்தை பயன்படுத்தப்பட்டிருக்கிறது.

எலும்புமுறிவு ஏற்பட்டால் சிகிச்சை செய்து உள்ளே உலோகத் தகடுகள் பொருத்தி சீர் செய்வதுண்டு. அல்லது விலா எலும்பின் ஒரு பகுதியை நீக்கி அதைக் கொண்டு ஒட்டுப் போடுவதும் உண்டு. பதிலாக ஆடு மாடுகளின் (முக்கியமாக எருதின்) எலும்பிலிருந்து உருவாக்கப்படும் 'பயோ-போன்' (BIO-BONE) என்ற மாற்றுப் பொருளையும் பொருத்தலாம். ரொம்ப காலத்துக்கு முன்பே இந்த முறை மேலை நாடுகளில் அறிமுகப்படுத்தப்பட்டு விட்டது. ஆனால் இந்தியாவில், ஒரு கிராமுக்கு 50 அமெரிக்க டாலர்கள் என்கிற அளவில் விலை கொடுத்து இதை இறக்குமதி செய்ய வேண்டியிருந்தது.



# “இது ஒரு வரப்பிரசாதம்!”

இந்த பயோ-போனை எதற்கு வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டும்; இங்கேயே தயாரித்தாலென்ன என்று தோன்றியிருக்கிறது டாக்டர் மோகன் குமாருக்கு. இவர் பி.சுப்புராஜ் & கம்பெனி என்ற சென்னை நிறுவனத்தின் ஆராய்ச்சிப் பிரிவு மருத்துவர். அவர் நினைத்ததைச் செயல்படுத்தி ஓரிரு மாதங்கள் ஆகி விட்டன.

“மிருகத்தின் எலும்பிலுள்ள புரதச் சத்தை மட்டும் எடுத்துக் கொண்டு அதில் உள்ள ஜெலடின் என்ற பொருளை முழுவதுமாக நீக்கி விடுகிறோம். பிறகு இணைக்கும் தன்மை கொண்ட கொலாஜெனைக் கலக்கிறோம். பயோபோனிலுள்ள ஒரே ரசாயனப் பொருள் இதுதான் என்றாலும், கொலாஜென் நமது உடலிலும் இருக்கவே செய்கிறது என்பதையும் குறிப்பிட வேண்டும். காமா கதிர்களைப் பாய்ச்சி இந்த எலும்பு ஸ்டெரிலைஸ் செய்யப்படுகிறது. இந்தியாவிலேயே இதை நாங்கள்தான் தயாரிக்கிறோம். ஒரு கிராம் 1.50 ரூபாய் என்று எங்கள் நிறுவனம் விலை நிர்ணயம் செய்திருக்கிறது” என்கிறார் டாக்டர் மோகன் குமார்.

இந்த பயோ-போன் சென்னையில் உள்ள CSIS மற்றும் CLRI ஆகிய நிறுவனங்களின் தீவிர ஆராய்ச்சிக்கு உட்படுத்தப்பட்டு ஓகே பெற்றிருக்கிறது. பொதுவாக எந்தவொரு வெளிப்பொருளை நம் உடலில் அறுவை சிகிச்சை மூலம் இணைத்தாலும் பக்க விளைவுகள் ஏற்படுவதுண்டு. ஆனால் பயோ-போன் பொருத்தப்பட்டவர்களுக்கு இதனால் எந்த விதப் பக்க விளைவுகளும் ஏற்படுவதில்லையாம்.

பொருத்தப்பட்ட சில மாதங்களில் மிருக எலும்பு கரைந்து விடுவதுடன், அந்த இடத்தில் இயற்கை எலும்பு வளர்வதற்கான திசுக்களும் தோன்றுமாம். இந்தத் திசுக்கள் விரைவில் கெட்டிப்படுகின்றன (calcification). உலோகத் தகடுகளைப் பொருத்தினால் அவற்றை நீக்க சில வருடங்கள் கழித்து இன்னொரு அறுவை சிகிச்சை செய்ய வேண்டியிருக்கும். பயோ போன் பயன்படுத்தினால் இந்த இரண்டாம் ஆபரேஷனைத் தவிர்த்து விடலாம்.

“பன்னிரண்டு பேரின் சேதமடைந்திருந்த தாடைப் பகுதியில் 'பயோ-போனைப்' பொருத்தியிருக்கிறேன். அத்தனையுமே வெற்றிகரமாக முடிந்திருக்கின்றன என்றுதான் சொல்ல வேண்டும்” என்றார் தமிழ்நாடு பல் மருத்துவக் கல்லூரியின் வாய்-முக அறுவை சிகிச்சைப் பிரிவின் பேராசிரியர் டாக்டர் ஆளவந்தார்.

“போன வருடம் இது பற்றிய விவரங்களை மருத்துவ கவுன்சிலுக்கு அனுப்பினேன். நடைமுறை வெற்றியையும் கணித்து எழுதச் சொன்னார்கள். இப்போது ஆதாரங்களுடன் விவரங்களைச் சமர்ப்பிக்கப் போகிறேன். சந்தேகமில்லாமல் இந்த பயோ-போன் ஒரு மருத்துவ வரப்பிரசாதம்தான்” என்றார்.

-ஜி.எஸ்.எஸ்.

• மோகன் குமார்





• ஆளவந்தார்




1996 மே 26

தாது வைகாசி 13

மலர் : 54

இதழ் : 43

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




## ஆட்சி நிலைக்குமா....?

இன்றைய சூழலில் வாஜ்பாயைக் காட்டிலும் சந்தோஷமான மனிதராக இருக்கக்கூடியவர் தேவே கௌடாதான்! தமக்கு வரவிருந்த முள்கிரீட பொறுப்பிலிருந்து தப்பிய சந்தோஷத்தில் இருப்பார்!

கர்நாடகத்தில் தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்பட்ட தருணத்தில், தேவே கௌடாவை டி.வி.யில் பேட்டி கண்டார்கள். 'டெல்லி ஆசைகள் எனக்கு ஒருபோதும் இருந்ததில்லை; அந்தப் பொறுப்புக்கு பொம்மை, ஹெக்டே போன்ற வேறு தலைவர்கள் உள்ளனர்' என்று உறுதியாகப் பேசினார்.

வி.பி. சிங், ஜோதிபாசு போன்றோர் அந்த முள் கிரீடத்தை அணிய மறுத்த பிறகு, மூன்றாவது அணி தேவே கௌடாவைத் தலைவராக முன்நிறுத்தியது!

வலுவான தலைவரை தேடித் தேடிப் பிடிக்க வேண்டிய குழப்ப நிலையில் உள்ள ஓர் அவியல் கூட்டணிக்கு, எடுத்த எடுப்பிலேயே ஆட்சி அமைக்கும் வாய்ப்பு மறுக்கப்பட்டது நியாயமே.

இது விஷயம் தொடர்பாக நீதிபதி சர்க்காரியா வெளியிட்டுள்ள கருத்து கவனத்துக்குரியது. (மாநில ஆட்சி அமைக்கப்படும் போது ஆளுனர் எவ்வாறு செயல்பட வேண்டும் என்று அவர் கூறியிருப்பது, மத்தியில் அரசு அமைக்கும் விஷயத்திலும் பொருந்தக்கூடியதே.)

'அறுதிப் பெரும்பான்மை அடிப்படையில் தீர்மானமான முடிவுகள் எடுக்க இயலாத நிலையில்,




அதிக இடங்களைப் பெற்ற கட்சிக்கே ஆட்சி அமைக்க வாய்ப்புத் தரப்பட வேண்டும். அது கூட்டணி கட்சியாக இருப்பின், அக் கூட்டணி தேர்தலுக்கு முன்பு ஏற்பட்ட கூட்டணியாக இருத்தல் வேண்டும். தேர்தலுக்குப் பிறகு ஆட்சி அமைக்கும் சௌகரியத்துக்காக ஏற்படும் கூட்டணிகளை, மக்களின் ஆதரவு பெற்ற கூட்டணிகளாகக் கருத முடியாது' என்கிறார் நீதிபதி சர்க்காரியா.

இந்த நியாயமான வாதத்தின் அடிப்படையில் பார்க்கும் போது, மூன்றாவது அணியின் அவசர அவியல் கூட்டணிக்கு எடுத்த எடுப்பிலேயே ஆட்சி அமைக்கும் வாய்ப்புத் தரப்படாதது சரிதான். மேலும், எந்த காங்கிரஸின் ஆதரவை நம்பி மூன்றாவது அணி ஆட்சி வாய்ப்புக் கேட்டதோ, அந்த காங்கிரஸ், இப்போதே அவர்கள் காலை வாரிவிட்டு விட்டது! ஆதரவு பிரகடனக் கடிதத்தை குடியரசுத் தலைவருக்கு அனுப்பாமல் தாமதித்து, நரித்தனமாக நாடக மாடியிருக்கிறார் நரசிம்மராவ்.

எனவே மூன்றாம் அணித் தலைவர்களின் கோபம் ராவை நோக்கித்தான் பாய வேண்டுமே யொழிய, கணித ரீதியாகவும் தார்மீக ரீதியாகவும் சரியான முடிவை எடுத்துள்ள குடியரசுத் தலைவரை நோக்கி அல்ல.

முள் கிரீடத்தை அணிந்திருக்கும் வாஜ்பாய் நேர்மைக்கும் நாணயத்துக்கும் பெயர் போனவர். குதிரை வியாபாரமெல்லாம் நடைபெறாது என்று பி.ஜே.பி. தரப்பில் வாக்குறுதியும் அளிக்கப்பட்டிருக்கிறது.

ஆனால் மே 31க்குள் பெரும்பான்மையை பி.ஜே.பி. எப்படி நிரூபிக்கப் போகிறது....?

பி.ஜே.பியை எதிர்க்கும் கட்சிகள் அனைத்துமே அது மதச்சார்புள்ள கட்சி என்ற வாதத்தின் அடிப்படையில்தான் எதிர்க்கின்றன.







எனவே அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு 'ஹிந்துத்வா' பற்றி மூச்சு விடுவதில்லை என்ற வாக்குறுதியை பி.ஜே.பி. அளிக்கலாம். அந்த வாக்குறுதியுடன், குறைகாண முடியாத கல்விக் கொள்கையையும் ஏற்கெனவே காங்கிரஸ் ஆட்சியில் தொடங்கப்பட்டுள்ள புதிய பொருளா தாரக் கொள்கையின் தொடர்ச்சியையும் உறுதி செய்யலாம்.

இந்த வாக்குறுதியின் அடிப்படையில் தி.மு.க., த.மா.கா. போன்ற கட்சிகளின் ஆதரவைக் கோரிப் பெறலாம். ஹிந்துத்வ பயமுறுத்தல் இல்லாததால், தேச நலன் கருதி மாநில கட்சிகளும் தங்கள் போக்கை மாற்றிக் கொள்ளலாம்.

ஹிந்துத்வத்தை மூட்டை கட்டி வைப்பதற்கு, சிவசேனையில் மட்டுமின்றி, பி.ஜே.பிக்குள் ளேயும் எதிர்ப்பு எழும். அதைச் சமாளித்து எதிர்ப்பாளர்களைச் சமாதானப்படுத்த வேண்டி யிருக்கும்.

இதையெல்லாம் செய்வதற்கான அறிவு தலைவர் வாஜ்பாயிடம் இருக்கிறது. ஆனால், திட்டத்தை நடைமுறைப்படுத்த வேண்டுமானால், பிற தலைவர்களின் ஒத்துழைப்பு தேவை. அதைப் பெறுவதற்கு மனஉறுதியுடனும் ராஜதந்திரத்துடனும் வாஜ்பாய் உழைக்க வேண்டும்.

அவர் இந்தப் பணியை உடனடியாக ஆரம்பிக்காவிட்டால், மே இறுதியில் பி.ஜே.பி. அரசு கவிழும்; அடுத்தபடியாக ஆட்சி அமைக்க மூன்றாவது அணி அழைக்கப்படும்; நரசிம்மராவின் திட்டமிட்ட நடவடிக்கையால் அந்த ஆட்சியும் சீக்கிரமே கவிழும்; மீண்டும் தேர்தல் அறிவிக்கப் பட, நிலையான ஆட்சியைக் காங்கிரஸே தர முடியும் என்ற தமது கூற்று நிரூபணமாகி யிருப்பதைச் சுட்டிக்காட்டி, மீண்டும் நரசிம்மராவே பிரதமராக வருவார்!

இந்த சதிக்கான அஸ்திவாரத்தை நரசிம்மராவ் ஏற்கெனவே போட்டு விட்டார் என்பதைப் பிற கட்சிகள் உணர்ந்து எச்சரிக்கையாகச் செயல்பட வேண்டும்.

# அன்புள்ள வாசகர்களே...



இதர பத்திரிகைகளிலிருந்து வேறுபட்டு விளங்க வேண்டும் என்பதற்காக கல்கியின் உள்ளடக்கத்தை மட்டுமின்றி அளவையும் வித்தியாசமாக நிர்ணயித்தார்கள் அதன் ஸ்தாபகர்கள்.

ஆனால், நாம் வாசகர் சந்திப்புகளின் போது சந்தித்த இன்றைய வாசகர்களோ 'கையடக்கமான அளவில் கல்கி பத்திரிகை இருக்க வேண்டும்' என்று விருப்பம் தெரிவித்தார்கள்.

இப்போதைய அளவில் கல்கியை அச்சிட பத்திரிகைக் காகிதம் கிடைப்பதும் கஷ்டமாகி வருகிறது. புதிய அச்சு இயந்திரங்களை இதற்காகப் பிரத்யேகமாக வடிவமைத்து வாங்குவதும் கடினமாகி வருகிறது.

எனவே, கல்கியின் அமைப்பைக் கையடக்கமான – ஆனந்த விகடன், குமுதம் அளவுக்கு மாற்றலாமா என்ற எண்ணம் நிர்வாகத் தரப்பில் எழுந்திருக்கிறது.

இந்த எண்ணத்தைச் செயலாக்கு வதற்கு முன் பெரும்பாலான கல்கி வாசகர்களின் கருத்தறிய வேண்டும் என்று முடிவு செய்தோம்.

கடந்த அரை நூற்றாண்டுக்கும் மேலாக உங்களின் தனியான மதிப் பையும் அன்பையும் பெற்றுவரும் கல்கி இதழின் உள்ளடக்கத்திலும் கொள்கைப் பிடிப்பிலும் எப்போதும் போல் ஒரு தனித்தன்மை பிரகாசிக்கும். நடைமுறை சௌகரியத்துக்காக வடிவ அமைப்பு மட்டுமே மாற்றப்படும். அமைப்பு மாற்றத்துடன் பக்கங்களின் எண்ணிக்கையும் 96 ஆக உயர்த்தப்படும். பத்திரிகைக் காகிதத்தின் விலை மேலும் உயர்ந்தாலொழிய விலையில் உயர்வு இருக்காது.

கல்கி குடும்பத்தினரான உங்களுக்கு இந்த வடிவ மாற்றம் ஏற்புடையதா என்பதை அறிய ஆவலாக இருக்கிறோம்.

வடிவ மாற்றம் வேண்டும்

அல்லது

வடிவ மாற்றம் வேண்டாம்

என ஒரு தபால் கார்டில் எழுதி, உங்கள் பெயர், முகவரியுடன் அனுப்பி வையுங்கள். அஞ்சல் அட்டையின் முகவரிப் பகுதியில் கடைசியில் உள்ள கூப்பனை ஒட்டி அனுப்ப வேண்டும்.

கருத்துத் தெரிவிக்கும் வாசகர்களில் 25 பேருக்குக் குலுக்கல் முறையில், ரூபாய் நூறு மதிப்புள்ள புத்தகங்கள் சிறப்புப் பரிசாக அனுப்பப்படும்.

உங்கள் கருத்தறிந்து செயல்பட காத்திருக்கிறோம்.

உங்கள் கருத்துக்களை அனுப்ப வேண்டிய கடைசி தேதி : 3.6.96

– ஆசிரியர்.

தபால் கார்டின் முகவரிப் பகுதியில் ஒட்ட வேண்டிய கூப்பன் :

**கல்கி**
(கருத்துக் கணிப்புப் பகுதி)
47, ஜவாஹர்லால் நேரு சாலை,
சென்னை – 600 097.

# பா.ஜ.க.வின் தீவிரத்தைக் கட்டுக்குள் வைத்திருப்பவர்!



நரசிம்ம ராவ் மீண்டும் பிரதமராவதையே மக்கள் விரும்புவதாக, கருத்துக் கணிப்புகள் தெரிவித்தன. அவரும் இரு தொகுதிகளில் போட்டியிட்டு அமோக வெற்றி பெற்றிருக்கிறார். ஆனால் மக்களின் தீர்ப்பு அவருக்குச் சாதகமாக இருந்தாலும் அவர் கட்சிக்கு எதிராகவே இருக்கிறது!

இந்த விநோத சூழலில் பி.ஜே.பி. தலைவர் வாஜ்பாயின் கரங்கள் வலுவடைந்துள்ளன. இம்முறை பி.ஜே.பி. அவரைப் பிரதமராக முன் நிறுத்தியதற்கு ஒரு வகையில் நரசிம்மராவ்தான் காரணம்! ஹவாலா விசாரணைகளை முடுக்கி விட அவர் அனுமதித்ததால்தானே அத்வானி ராஜினாமா செய்யும்படி ஆயிற்று!

ஹவாலா விவகாரம் வெடிப்பதற்கு முன்னரே கூட, பி.ஜே.பி. தரப்பில் வாஜ்பாயிதான் பிரதமராக முன்நிறுத்தப்பட வேண்டும் என்று பேசப்பட்டது. அத்வானியை ஒப்பு நோக்க அவர் நடுநிலையாளர்; பாப்ரி மஸ்ஜித், ரத யாத்திரை போன்றவற்றில் தொடர்பு கொள்ளாமல் ஒதுங்கியிருந்து நல்ல பெயர் எடுத்தவர். அதனால் சிறுபான்மையினரின் நம்பிக்கையையும் பெற வல்லவர் என்று கருதப்படுகிறது. இன்று பி.ஜே.பியின் மிக மூத்ததலைவர் அவர்தான். உ.பி. மாநிலத்தைச் சேர்ந்தவர். குவாலியர் பகுதியில் வளர்ந்தவர்; கவிஞர் - சிறந்த சிந்தனையாளர். பிரம்மச்சாரி!

ஆர்.எஸ்.எஸ். தொண்டராய் பொதுவாழ்வில் இறங்கினார் வாஜ்பாய். ஷ்யாம பிரசாத் முகர்ஜியுடன் (ஜனசங்கத்தைத் துவக்கிய தலைவர்) இணைந்து உழைத்தார்.

1971 இல் ஜனசங்கம் ஜனதாவுடன் இணைந்தது. அக்கட்சி ஆட்சி அமைத்த போது, மொரார்ஜி தேசாய் அமைச்சரவையில், வாஜ்பாய் வெளியுறவுத்துறை அமைச்சராக இரு ஆண்டுகள் சிறப்பாகப் பணிபுரிந்தார். இந்தோ-பாக் உறவுகளில் புதிய திருப்புமுனை ஏற்படுத்தி, நல்லபெயர் தட்டிக் கொண்டார்.

ஆயினும் எல்.கே. அத்வானி போலக் கடுமையான உழைப்பாளி அல்ல வாஜ்பாய். ரொம்ப சாவகாசமாக இருப்பார் - lazy என்று சொல்லும் அளவுக்கு. ஆழமாக விஷயங்களைக் கவனிக்காமல் மேலோட்டமாகச் செயல்படும் பாணி வாஜ்பாயினுடையது என்றும் சொல்லப்படுவதுண்டு.

ஆனால் ஜனதா ஆட்சி 79 இல் கவிழ்ந்துவிட்டது. ஜனதாவின் ஜனசங் பிரிவு வெளியேறி, பி.ஜே.பி. என்று புதிய கட்சியாக உருமாறியது. அந்த கட்டத்தில் 'காந்திய சோஷலிஸம்' என்ற கோஷத்தை அறிமுகப்படுத்தியவர் வாஜ்பாய். கொள்கை வலுவிருந்த போதும் புதிய கட்சியால் இந்திரா காந்தியுடன் மோத முடியவில்லை. இந்திரா கொலைக்குப் பிறகு நடந்த தேர்தலில் பி.ஜே.பி. இரண்டே இடங்களைப் பெற்றது. மாதவ ராவ் சிந்தியாவிடம் (குவாலியர் தொகுதியில்) தோற்றுப் போனார் வாஜ்பாய்! (இத்தனைக்கும் அந்தத் தேர்தலில் சிந்தியாவின் அம்மா ராஜமாதா, வாஜ்பாயிக்கு ஆதரவாக உழைத்தார்.)

'அவ்வளவுதான், பி.ஜே.பிக்கு இனி எதிர்காலம் இல்லை' என்ற நிலையில் அத்வானியிடம் தலைமைப் பொறுப்பு தரப்பட்டது. வாஜ்பாயின் நடுநிலைப் போக்கினால் ஏமாற்றமுற்ற ஆர்.எஸ்.எஸ்., அத்வானியைத் தலைவராக முன்நிறுத்தியதுடன், பி.ஜே.பிக்குப் புத்துயிர் ஊட்ட தமது தொண்டர் படையிலிருந்து கோவிந்தாச்சார்யா போன்றோரை அனுப்பி வைத்தது. விஷ்வ ஹிந்து பரிஷத்தும் பி.ஜே.பிக்கு புது ரத்தம் ஏற்ற உழைத்தது.

# உடைந்த கனவுகள்!

கங்கணம் கட்டிய கைகளில்
மஞ்சள் கூட அப்படியே இருக்கிறது.
மருதாணி இடப்பட்ட கால்கள்
இன்னும் ஈரமாகவே இருக்கின்றன.
அதற்குள்,
ஒற்றுமை என்னும் மாயக்கட்டு
உடைந்துபோய்விட்டது.
நாங்கள்,
விளக்கை அணைத்துவிட்டு
தீபாவளி கொண்டாடினோம்.
இருளைப் போக்க
விளக்கேற்றுவதற்குள்ளாகவே
விடியல் வந்து போய்விட்டது
கோபத்துடன்...
அதற்குள்,
ஒற்றுமை என்னும் மாயக்கட்டு
உடைந்துபோய்விட்டது.
நாங்கள்,
இன்னும் இரண்டு அடிகூட
எடுத்துவைக்கவில்லை
வாழ்க்கையின் இறுதியில்
நடக்க வேண்டியவை
இப்போதே நிகழ வேண்டுமென்று
விதியின் விளையாட்டு
வற்புறுத்துகிறது.
எங்கள் நண்பர்கள்
பிரிந்துபோய் விட்டார்கள்.
ஒற்றுமை என்னும் மாயக்கட்டு
உடைந்துபோய்விட்டது.

— இது யார் எழுதிய கவிதை தெரியுமா?

79-ல் ஜனதா கட்சி நொறுண்டதால் ஆட்சியையும் இழக்க நேரிட்டது. அப்போது 'உடைந்த கனவுகள்' என்ற தலைப்பில் அன்றைய வெளியுறவுத்துறை அமைச்சராய் இருந்த, இன்றைய பிரதமர் வாஜ்பாய் எழுதிய கவிதைதான் இது. அன்றைக்கு எழுதிய கவிதை இன்றைக்கும் கச்சிதமாகப் பொருந்துகிறது என்பதுதான் ஆச்சரியம்.

அப்படியானால் அடுத்துவரும் தேசிய முன்னணி ஆட்சி மாத்திரம் எத்தனை நாளைக்கு நீடித்துவிடும்? நீடிக்க விட்டுவிடுவாரா நரசிம்மராவ்? இதுதான், அரசியல் வட்டாரங்களில் கேட்கப்படும் கேள்வி.

அதிக பட்சம் ஓராண்டுக்கு ஆதரவு கொடுத்துவிட்டு, பிறகு ஆதரவை விலக்கிக் கொண்டுவிட்டால் தே.மு.ஆட்சி கவிழ்ந்துவிடும். பிறகு நிலையான ஆட்சிக்குக் காங்கிரஸை விட்டால் ஆள் கிடையாது என்று சொல்லி ஜெயித்துவிடலாம் என்பது ராவ் போடும் கணக்கு.

ஆனால், ராவ் பக்கம் இருக்கும் எம்.பிக்களில் பலபேர் அதற்குள் மூப்பனார் பக்கம் வந்துவிடவும் வாய்ப்பிருப்பதாக ஒரு பேச்சு. அப்போது தே.மு.ஆட்சி கவிழாது. தேவையானால் பிரதமர் மாத்திரம் மாறக்கூடும்!

இன்னொரு விஷயமும் கிசுகிசுக்கப்படுகிறது. அதாவது, பா.ஜ.கவுக்கு ஆதரவு தருவதில் தே.மு. விலுள்ள சில மாநிலக் கட்சிகளுக்கு ஆசையிருக்கிறது. அப்படிச் செய்தால் அந்தக் கட்சிகளை வகுப்புவாதக் கட்சிகள் என்று ராவ் தரப்பினர் பிரசாரம் செய்வார்கள் என்கிற பயத்தினால்தான் ஆசையை அடக்கிக் கொண்டிருக்கிறார்களாம். அதனால் பா.ஜ.க.வும் ராவைத்தான் பிரதான எதிரியாகக் கருதுகிறது என்பதால், தான் ஆட்சியில் இல்லாமல் போனாலும் மறுபடியும் ராவ் பிரதமராக வந்துவிடக் கூடாது என்பதில் பா.ஜ.க மிகவும் தெளிவாகவே இருக்கிறதாம். அதனால் ராவ் போடும் கணக்கு தப்புக் கணக்குத்தானாம்!

— 'டெல்லி இன்டர்நெட்'

இந்த சமயத்தில் வாஜ்பாய் 5-6 ஆண்டுகளுக்கு ஓரங்கட்டப்பட்டார். ஆனால் அவரால் செய்ய முடியாததை அத்வானி செய்தார். கட்சியை வளர்த்தார். 1989 தேர்தலில் பி.ஜே.பி. 87 இடங்களைப் பிடித்தது; '91 தேர்தலிலோ 119 இடங்களில் வென்றது. இந்தத் தேர்தலில் 160 இடங்கள்.

அத்வானியின் ரத யாத்திரை, பாப்ரி மஸ்ஜித் தகர்ப்பு கொள்கை போன்றவற்றைக் கடுமையாக எதிர்த்தார் வாஜ்பாய்.

ரத யாத்திரை புறப்பட்ட போது அவர் அடித்த கமென்ட்:

'அத்வானிஜியை ஒரு வானரப்படை பின் தொடர்ந்து செல்கிறது... ராமரைப் பின் தொடர்ந்து சென்ற வானரப் படைக்குக் கூட தாங்கள் எங்கே செல்கிறோம் என்பது தெரிந்திருக்கவில்லை.'

பாபர் மசூதி தகர்க்கப்பட்டதற்கு வருத்தம் தெரிவித்த ஒரே பி.ஜே.பி. தலைவர் வாஜ்பாயிதான். தீவிரர்களுக்கிடையே, உணர்ச்சிவசப்படாத மிதவாதியாக இருந்ததாலேயே அவர் பரபரப்பான தலைவராக உருவாகவில்லை. ஆனால் கட்சியை விட்டுக் கொடுக்காமல் தொடர்ந்து உழைத்தார்.

இப்போது, ஹிந்து தீவிரவாத கட்சி என்ற குற்றச்சாட்டை ஈடுகட்டுவதற்காக மிதவாத முத்திரையுடைய வாஜ்பாயைத் தலைவராக முன்நிறுத்தி வெற்றியும் கண்டிருக்கிறது பி.ஜே.பி. உண்மையில் அக்கட்சியின் தீவிரவாத நெருப்பைக் கட்டுக்குள் வைத்திருக்கக்கூடிய level-headed தலைவரும் அவர்தான்.

**— எஸ்.ஆர்., எஸ்.வி.என்.**

அட்டை வண்ணப்படம் - நன்றி :
**ஃப்ரண்ட்லைன்**

## தினகரன், ஆதிராஜாராம் :

**தினகரன், ஆதிராஜாராம் ஆகியோர் அ.இ.அ.தி.மு.க. ஆட்சியின் போது தங்கியிருந்த ஆஸ்பத்திரி அறைகள் எப்படியெல்லாம் சொகுசாக இருந்தன? ஜி.ஹெச்சுக்கு ஒரு விசிட் அடித்தோம்....**

# பறிபோன நட்சத்திர வசதிகள்!


• ஆதிராஜாராம்


• தினகரன்

சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியின் பழைய பிளாக்கில் இரண்டாவது மாடி. இங்குதான் ஸ்பெஷல் வார்டுகள் இருக்கின்றன. தினகரனும், ஆதிராஜாராமும் இங்கே 'குடித்தனம்' செய்யும் போது, மப்டி போலீஸ்காரரின் கேள்விகளுக்குத் தப்பாமல் யாரும் கலபமாகச் சென்று விட முடியாது. இன்னமும் சொல்லப் போனால், தினகரன் தங்கியிருந்த 42-ம் நம்பர் 'ஏ' கிரேடு ஸ்பெஷல் வார்டு ரூம் நம்பர் ஆறில், பல சமயங்களில் டாக்டர்களுக்கும் நர்ஸ்களுக்கும் கூட அனுமதி மறுக்கப்பட்டிருக்கிறது! ஆதி, தங்கியிருந்த அறைக்கு ஏ.ஸி. கிடையாது. அது 'பி' கிரேடு ஸ்பெஷல் வார்டு.

"பெரும்பாலும் நாங்கள் கொடுக்கும் மாத்திரைகளைத்தான் ஆதி சாப்பிடுவார். ஆனால் தினகரன், 'வெளியிலிருந்து' மாத்திரைகள் வாங்கிக் கொள்ளுவார். தினகரன் அடிக்கடி 'தீவிர மாரடைப்பு சிகிச்சை' பிரிவுக்குச் 'சென்று' விடுவது உண்டு" என்று நம்மிடம் சொன்னார் இளம் டாக்டர் ஒருவர். அதன் அர்த்தம் என்னவென்றால் முனிதர் அடிக்கடி ஆஸ்பத்திரியிலிருந்து மாயமாய் மறைந்து விடுவாராம்!

ஜெ.ஜெ. டீ.வி. சம்பந்தப்பட்டவர்களும் சசிகலா நடத்தும் மெடல் கிங் நிறுவனத்தினரும் அடிக்கடி வந்து அலுவலகப் பணிகளைப் பற்றி பேசி விட்டுச் செல்வார்களாம். செல்லுலரில் தமது உலக நண்பர்களோடு தொடர்பு கொண்டவண்ணம் இருப்பாராம் தினகரன். காலை, மதியம், இரவு என்று மூன்று வேளையும் வீட்டிலிருந்துதான் சாப்பாட்டு வகைகள் வருமாம். சசிகலா ஒரே ஒரு முறை இங்கு வந்து தினகரனைப் பார்த்து விட்டுச் சென்றிருக்கிறார். சுகாதாரத் துறை அமைச்சராக இருந்த முத்துசாமி தினசரி தினகரன் மற்றும் ஆதியின் "உடல் நிலையை" பற்றி விசாரித்து வந்தாராம்.

தினகரன் ஜி.ஹெச்சுக்கு வந்த போது ஸ்பெஷல் வார்டின் மூன்று ஏ.ஸி. அறைகளிலுமே ஏஸி சரியாக இயங்கவில்லை. எல்லாம் பழைய யூனிட்டுகள். அப்புறம் ஒரு போர்_மும்முரத்தில் மூன்று அறைகளுக்குமே புது ஏ.ஸி. யூனிட்டுகள் போடப்பட்டன. ஜன்னல், கதவு திரைச் சீலைகள் மாற்றப்பட்டன. சோபாக்கள், மேஜை, நாற்காலிகள் புதிதாகப் போடப்பட்டன. வீட்டிலிருந்து கலர் டீ.வி. கொண்டு வந்து வைத்துக் கொண்டார் தினகரன்.

இது தவிர, ஸ்பெஷல்-வார்டு அறைகளுக்கு எதிராக ஓர் அறை தனியாக இருக்கிறது. எம்.ஜி.ஆர். 1967ல் குண்டடிபட்ட போது இங்கு சில நாட்கள் தங்கி இருந்தார். இந்த அறையும், இப்போது நட்சத்திர அறையாகத் தயாராகி விட்டது. 'சசிகலாவுக்காக' தயாராகி வருகிறது என்று பத்திரிகைகள் முன்பு இண்டலாகச் சொல்லி வந்தது இந்த அறையைத்தான்! ஒருவேளை இனிமேல் அமுலாக்கப் பிரிவினரால் கைது செய்யப்பட்டாலும் சசிகலாவுக்கு இந்த அறை கிடைக்குமா என்பது சந்தேகமே! ஆனால் ஆஸ்பத்திரி வட்டாரங்களில் இந்த அறைக்குத் தியானேஸ்வரனை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

இது ஒருபக்கம் இருக்க, தினகரனையும், ஆதியையும், தி.மு.க. ஆட்சி வர இருப்பதை முன்னிட்டு மட்டும் அவசரமாகச் சிறைக்கு அனுப்பவில்லையாம். மத்திய அரசின் உத்தரவின் பேரில் சென்னைக்கு வந்து இவர்களைப் பரிசோதித்த டெல்லி டாக்டர்கள், 'அரசியல் அழுத்த'த்தின், காரணமாக சென்னை டாக்டர்கள் பொய்க் காரணங்கள் காட்டியிருப்பதைப் புரிந்து கொண்டார்கள். டாக்டர்களுக்கு 'ரெஜிஸ்ட்ரேஷன்' வழங்கும் அகில இந்திய மெடிக்கல் கவுன்ஸிலுக்கு விஷயம் போனது. அவ்வளவுதான்! 'நம் தொழிலுக்கே ஆபத்து வந்து விடும் போலிருக்கிறதே' என்று பயந்து, தினகரனையும் ஆதியையும் பேக் செய்து விட்டார்கள்! இருந்தாலும் பொது மருத்துவமனையின் சில டாக்டர்கள் மருத்துவ கவுன்ஸிலின் கண்டனத்துக்கு ஆளாகக்கூடும்.

**- தில்லப்பா**

தொடர்ந்து பத்தொன்பது ஆண்டுகளுக்கு மேலாக மேற்கு வங்கத்தின் முதலமைச்சராயிருக்கும் ஜோதிபாசு, பிரதமர் பதவிக்கான போட்டியில் தாம் இல்லை என்று திட்டவட்டமாக அறிவித்து விட்டார்.

"எத்தனை பெரிய வாய்ப்பு இது! தட்டில் வைத்துக் கொடுப்பதை, ஏன் வேண்டாம் என்கிறார்?"

"காங்கிரஸ் வெளியிலிருந்து ஆதரவு கொடுக்கும் என்று சொல்லுவதை நம்பிப் பதவி ஏற்றால், சந்திரசேகருக்குச் செய்த மாதிரி, பாதியில் காலை வாரி விட்டுவிடும் என்று நினைக்கிறார் ஜோதிபாசு. அதனால்தான் வேண்டாம் என்று ஒதுக்கி விட்டார்!" என்கிறார் ஃபிரண்ட்லைன் ஆசிரியர் – ஜோதிபாசுவின் நெருங்கிய நண்பர் – என். ராம்.

எண்பதைத் தாண்டி விட்ட ஜோதிபாசு, எப்படிப்பட்டவர்? வெறும் அரசியல்வாதி மட்டும்தானா?

ராம் சொல்கிறார் :



# "சுக்குக் காப்பியை ருசித்துச் சாப்பிடுவார் ஜோதிபாசு!"

சில வருடங்களுக்கு முன், எல்.ஐ.சி. ஊழியர்கள் மகாநாட்டுக்கு, பாட்னா போனார் ஜோதிபாசு. பாட்னா ஸ்டேஷனில் ஒரு கொலையாளி அவர் அருகே போய்த் துப்பாக்கியால் சுட்டான். குறி தவறி முகமது அமின் என்கிற ஊழியர் மீது குண்டு பாய்ந்து விட்டது. துணிச்சல்காரரான ஜோதிபாசு, "பிடியுங்கள் அவனை" என்று துரத்திக் கொண்டு ஓட முற்பட்டார். செக்யூரிடி அணியினர் தடுத்ததால்தான் நின்றார். ஆனால் அவரிடம் துளியும் பதற்றமோ, பரபரப்போ, ஏன் – அச்சமோ கூடத் தெரியவில்லை.

உணர்ச்சிவசப்பட்டோ, குரலை உயர்த்தியோ பொதுக் கூட்டங்களில் பேச மாட்டார். ஆனால் கேட்கிறவர்களைக் கட்டிப் போட்டு விடும் தன்மை அவர் பேச்சுக்கு உண்டு.

ஒளிவுமறைவு இல்லாமல் மனத்துக்குப் பட்டதைப் பளிச்சென்று நேரிடையாகச் சொல்லுவார் பாசு.

சென்னைக்கு வரும்போதெல்லாம், இரண்டு மூன்று நாள் தங்குகிற மாதிரிதான் அவருக்கு வேலை இருக்கும். அதனால் தினசரி அவரைச் சந்திக்க நான் போவேன். லஞ்ச் அல்லது டின்னர் அவரோடு தான். சிம்பிள் ஆன சைனீஸ் உணவு அவருக்குப் பிடிக்கும்.

இங்கே ஒருமுறை தட்சின் ரெஸ்டாரண்டுக்குக் கூட்டிக் கொண்டு போனபோது, 'எத்தனை வகை தென்னிந்திய உணவு வகைகள்!' என்று வியந்து போய் விட்டார்.

'சங்கர நேத்ராலயா'வை நடத்தும் டாக்டர் பத்ரிநாத்தைப் பார்க்காமல் போக மாட்டார். அவர் மீது அத்தனை பிரியம், மரியாதை. அதே போல்தான் மதர் தெரசாவிடமும். மதர் தெரசா எப்போது வேண்டுமானாலும் ஜோதி பாசுவின் வீட்டுக்கோ அலுவலகத்துக்கோ போய் வருவார். அவருக்கு அத்தனை உரிமை கொடுத்திருக்கிறார். ஏழை மக்களின் துயர் துடைக்கிறவர் என்று அவர் மீது அபரிமித மரியாதை.

திருமதி எம்.எஸ். சுப்புலட்சுமி வீட்டுக்கும் போய், சதாசிவம் அவர்களைச் சந்தித்துப் பேசுவார். அதுவும் எம்.எஸ். வீட்டில் கொடுக்கப்படும் சுக்குக் காப்பியை ருசித்துப் பருகுவார்!



"சைக்கிள் பேரணி"க்கு எல்லாரும் போனாங்களே ஏன் திரும்பி ஓடி வர்றாங்க?"

"எதிர்ல சைக்கிள் செயின் பேரணி வந்துக்கிட்டு இருக்காம், அதான்."

--சந்தியூர் ஏ. கோவிந்தன்

**************************

எம்.எஸ். தமது இசை மூலம் கோடிக்கணக்கான நிதியை சேவை ஸ்தாபனங்களுக்கு அளித்திருப்பதால், அவரை எப்போதும் பாராட்டுவார். அவருடைய பஜன் பாடல்களைக் கேட்பார்.

அதிகமாக உணர்ச்சியை வெளிக்காட்டாத மனிதர். ஆனால், ராஜீவ் காந்தி கொலையுண்ட போது, அதிர்ந்து போய், உண்மையிலேயே வெளிப்படையாக வருந்தினார். "என்ன நடக்கிறது நாட்டில்? நாம் எங்கே போய்க் கொண்டிருக்கிறோம்?" என்று கலங்கிப் போனார். ஓர் ஓரமாகப் போய் உட்கார்ந்து கொண்டு அனுதாபச் செய்தியை எழுதிக் கொடுத்தார். மறுநாள் ஸ்டேட் கெஸ்ட் ஹவுஸில் பார்த்தபோது, ராஜீவுடன் தாம் சந்தித்த நிகழ்ச்சிகளை நினைவுபடுத்திக் கொண்டு, "அவருக்கு ஆயுசு போதவில்லை... ஆனால் பாருங்கள், இருந்த போதும் அதிகம் செய்ய முடியவில்லை அவரால். ஆனால் பிறகு நிறையத் தெரிந்து கொண்டார். அதற்குள் இப்படி ஒரு முடிவு அவருக்கு வந்து விட்டது—நாட்டுக்குக் கேடுதான்..." என்றார் வருத்தத்தோடு.

மாநில மார்க்ஸிஸ்ட் கட்சி அலுவலகத்துக்குத் தினசரி வருவார் ஜோதிபாசு. அங்கே பிரமோத் தாஸ் குப்தாவுடன் பேச்சு வார்த்தைகள் நடத்துவார். கட்சி நிலவரம் பற்றி அறிந்து கொள்ளுவார்.

நிறையப் புத்தகங்கள் படிப்பார். அரசியல் நூல்கள் தவிர, அவருக்கு மிகப் பிடித்த நகைச்சுவை எழுத்தாளர் பி.ஜி. வோட்ஹவுஸின் புத்தகங்களும் பிடிக்கும்.

இங்கே ஒருமுறை வந்தபோது, ஆர்.கே. நாராயணைப் பார்க்க வேண்டும் என்று அவர் வீட்டுக்கு அழைத்துப் போகச் சொன்னார்.

எல்லா வகை மக்களிடமும் பேசிப் பழகுவார். இன்டெலக்சுவல்கள், டாக்டர்கள், வக்கீல்கள், வியாபாரிகள் என்று எல்லாத் தரப்பிலும் அவருக்கு நண்பர்கள் உண்டு. எல்லா முதலமைச்சர்களுடனும் சரளமாகப் பழகுவார் ஜோதிபாசு - ஜெயலலிதா உட்பட.

அங்கே உள்ள பத்திரிகைகள் அவர் பேச்சுக்களை விஷமமாகத் திரித்து வெளியிடுகின்றன என்று அங்கே பத்திரிகையாளரிடமே சொல்லுவார்.

"உங்கள் சென்னைப் பத்திரிகைகள் விருப்பு வெறுப்பு இன்றி எழுதுகின்றன!" என்று புகழுவார்.

பிரஸ் கான்ஃப்ரன்ஸ்களில் எல்லாம் வெட்டொன்று துண்டு இரண்டாகப் பேசுவார்.

ஒரு காலத்தில் பவர் கட்டுக்குப் பெயர் போன மேற்கு வங்கம், இன்று, பீஹாருக்கும், டில்லிக்கும், ஆந்திராவுக்கும் மின்சாரம் கொடுக்கிற அளவுக்கு நிலைமையை மாற்றி அமைத்திருக்கிறார் - பேராசிரியர் சுபீர் சென் என்னும் அறிவாளியை அமைச்சராக்கி.

பிரயாணம் செய்வது ரொம்பவும் பிடித்தது அவருக்கு. லண்டன் போனால், ஸ்காட்லாந்து போவார். போகிற வழிகளில் எல்லாம் இயற்கைக் காட்சிகளை வெகுவாக ரசிப்பார். ஸ்வீடன், ஐரோப்பிய நாடுகள் எல்லாம் அவருக்கு மிகப் பிடித்த இடங்கள்.

தெற்கு அவருக்கு மிகப் பிடிக்கும். இந்த ஆண்டு ஏற்காடு, கொடைக்கானல், ஊட்டி எல்லா இடத்திலும் வந்து தங்குவதாகச் சொல்லி இருந்தார், பேரக் குழந்தைகளுடன். வர முடியாமல் போய் விட்டது.

தொகுப்பு : **சாருகேசி**

---

# வென்ற சிறுகதை!

ஏப்ரல் மாதக் கல்கி இதழ்களில் வெளியான சிறுகதைகளில் மிகச் 'சிறந்த சிறுகதை என்று 'மழலை மேதை'யைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள் வாசகர்கள். அதை எழுதிய செ. சங்கர்பாபு ரூ. 500 சிறப்புப் பரிசு பெறுகிறார்.

"இந்த மூணு வேளைச் சாப்பாடு அங்க எவன் போடுதான்?' என்று கருப்ஸ் கேட்டது, தாத்தாவையா, எங்களையா? நெஞ்சத்தை நெருடிச் சிந்திக்க வைக்கும் கேள்வி!" என்று தாம் தேர்ந்தெடுத்ததற்கான காரணத்தைக் கச்சிதமாகக் கூறி ரூ.100 பரிசுபெறும் வாசகர் :

எஸ். விஜயா, 199, டி.வி. நகர், திருவெறும்பூர், திருச்சி - 13.

— ஆர்.

# KALKI SHOPPING PAGE

## மணமக்கள் தேவை இலவச சேவை

அனைத்து சமூகத்திலும், ஆயிரக்கணக்கான வரன்கள் பெற உடன் பதிவுசெய்ய தொடர்பு கொள்ளவும்.



**BEST BRIDE & GROOM BANK™**

H.O.: 3rd Floor, Shanthi Complex,
26, Ranganathan Street,
Madras - 600 017.
Phone : 4348560 4347025

B.O.: 13, College Road,
Nanganallur, Madras - 114.
7, Station Road, Tambaram
Sanatorium,
Madras - 600 047.
5, Second Main Road,
New Colony,
Chromepet,
Madras - 600 044.

Working on Sundays also

## பத்மஸ்ரீ பேர்ல்ஸ்

ஹைதராபாத் முத்துக்கள், பவழம், மாணிக்கம், மரகதம், வைரம் மற்றும் அனைத்து வகை நவரத்தினங்களும், சிறப்பாக பிறந்த தின கற்களும் கிடைக்கும். பிரசித்தி பெற்ற ஷோரூம்

சர்வதேச அளவில் ஒத்துக் கணிப்பாவின் மூலம் பிறந்த தின கற்களை சரியாக ஆலோசனை பெறுவதற்கு ரூ. 300/- மட்டும் (Cash, M.O.,/DD) அனுப்ப வேண்டும்.

இலவசமாக ஜாதகக் கணிப்பும் தபால் மூலம் அனுப்பி வைக்கப்படும். (Manual calculations also available.) எனவே பணத்துடன் உங்கள் பெயர்/பிறந்த தேதி, பிறந்த நேரம் மற்றும் பிறந்த இடத்தை கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**PADMASHRI PEARLS**
**53, North Usman Road,**
**(Opp. to A.R.R. Complex)**
**T. Nagar, Madras - 600 017.**
**Phone : 8234060**
**Pager - 9632 -756314**

FOR THE LOVERS OF SUNGUDI SAREES

A FINEST SUNGUDI SAREE OFFERED TO OUR CUSTOMERS PAY A VISIT AND SEE THE COOL AND COMFORT OF

## SAKUNTHALA SAREES

ALSO AVAILABLE

- RANI SAREES
- BENGAL COTTON SAREES
- BENGAL PRINTED PURE SILKS
- BATIK COTTON SAREES
- CHUDDIDAR MATERIALS (FINE & COLOURFUL BATIK DESIGNS)

## MADURAI TEXTILES

2, SIVAPRAKASAM ROAD,
PONDY BAZAAR, MADRAS - 600 017

27.4.1996 அன்று கல்யாண பொன் விழா கண்ட தம்பதியர்
திரு. M.A. சுவாமிநாதன்
திருமதி S. சாரதாம்பாள்
அவர்களுக்கு எங்கள் வணக்கங்கள்.



இங்ஙனம்
திரு. திருமதி சங்கரன்.
திரு. திருமதி லட்சுமணன்
திரு. திருமதி விஸ்வநாதன்
திரு. திருமதி காசிநாதன்
திரு. திருமதி வெங்கடரமணன் குடும்பத்தினர்
திரு. திருமதி லட்சுமி கிருஷ்ணமூர்த்தி
திரு. சுந்தர்
மகன்கள், மகள்கள், பேரன் பேத்திகள்



அதிக சம்ஸ்கிருத ஞானமில்லாத ஒருத்தர். ரொம்பவும் பக்தியோடு தினமும் 108 தடவை சொல்லி வந்தார்:

"பத்மநாபோ மரப் பிர்பு:"

'பத்மநாபோ அமரப் பிரபு:' என்று பதம் பிரித்துச் சொல்றதுதான் சரி. அமரர்களின் (தேவர்களின்) பிரபுவே-அரசனே- என்று அதற்கு அர்த்தம்.

ஆனால் 'மரப் பிரபு:'ன்னு தப்பாகப் பதம் பிரித்தவர் மரங்களுக்கு அரசனே என்று அர்த்தம் பண்ணிக் கொண்டார்! அந்த அர்த்தத்துக்கு ஏற்ப, ஊர்க் கோடியிலிருந்த அரச மரத்தைச் சுற்றி வந்து 'பத்மநாபோ மரப் பிரபு:' 'பத்மநாபோ மரப் பிரபு:'ன்னு தினமும் 108 பிரதட்சணம் பண்ணினார்.

அந்த வழியே போன ஒரு சம்ஸ்கிருத பண்டிதர் இதைப் பார்த்து நடுங்கிப் போயிட்டார்.

தவறாக உச்சரித்தவரை திருத்தினார். திருத்தினார் "நீர் ரொம்ப உசந்த காரியம்தான் பண் ஆனால் வாக்கு சரியில்லை. மனாபோ அமரப்பிரபு: படின்னு சொல்லணும்..." என்று அர்த்தத்தையும் விளக்கினார்.

தவறாக உச்சரித்தவர் ரொம்ப வேதனைப்பட்டு, "அடடா! தெரி மல் சொல்லிவிட்டேனே... எனக் பாவம் சம்பவிக்குமா?" எ கவலையுடன் கேட்டார்.

"அதெல்லாம் சம்பவிக்கா தெரியாமல் சொன்னது தோஷமில்லை; இ மேல் அப்படிச் சொல்லாமல் சரியாகச் சொல்லு..." என்றார் திருத்தினா

மறுநாளிலிருந்து திருத் உச்சரிக்க ஆரம்பித்தார் முதலாமவ 'மரப் பிரபு' அல்ல என்பதால் மர தைப் பிரதட்சணம் பண்ணுவதையு நிறுத்திவிட்டார். வாசல் இன்னை

# குறையொன்றுமில்லை

யில் உட்கார்ந்தபடியே 'பத்மநாபோ அமரப் பிரபு:' என்று சொல்லி வந்தார்.

அன்று இரவு, திருத்திய வித்வானின் சொப்பனத்தில் பகவான் வந்தார்.

"உம்மை யாரு சம்ஸ்கிருதம் படிக்கச் சொன்னா...? அப்படியே படிச்சதுதான் படிச்சீர்... அந்த பக்தரை யாரு திருத்தச் சொன்னா...? நீர் திருத்திய பிறகு அவர் மரத்தைப் பிரதட்சணம் செய்யறதை நிறுத்திட்டார்... அப்படியானால் நான் மரங்களுக்குப் பிரபு இல்லையா? உமக்கு விஷ்ணு புராணம் தெரியாதா...?

ஜோதிர் விஷ்ணு:
புவனானி விஷ்ணு:



வனானி விஷ்ணு:

என்று பராசர மஹரிஷி சொன்னது தெரியாதா? (ஜோதிர்–ஒளி; புவனானி– உலகம்; வனானி– காடுகள்) நீர் திருத்திச் சொன்னதால் 108 பிரதட்சணங்கள் செய்யறதை அவர் நிறுத்தினார். திரும்பவும் போய் அவரிடத்திலே சொல்லும்– 'மரப் பிரபு:' என்றே சொல்லச் சொல்லு..." என்று கோபித்துக் கொண்டார் பகவான்.

குழந்தை சரியாக உச்சரிக்காவிட்டாலும் மகிழ்ச்சியோடு நாம் கேட்கவில்லையா...? அது போல்தான் எல்லையற்ற கருணையுடைய பகவானும் நம்மைக் குழந்தைகளாய் பாவித்துக் கேட்கிறான்.

ஒருவருக்கு 'க்ரு' என்று சொல்ல வராது... 'க' வரும் இடத்தில் எல்லாம் 'த' என்று உச்சரிப்பார். அவருக்கு மந்திரம் சொல்லிக் கொடுக்க முயன்றார் ஒரு வித்வான்.

"ஸ்ரீ கிருஷ்ணாய நம:" என்பதற்கு பதில் "ஸ்ரீ திருஷ்ணாய நம:" என்று தவறாகவே உச்சரித்தார் மாணவர். 'உமக்கு என்னால் சொல்லித்தர முடியாது...' என்று சலித்துக் கொண்டார் வித்வான்.

அங்கே இன்னொரு வித்

வான் வந்தார். "அவர் ஸ்ரீ க்ருஷ்ணயே என்றே சொல்லட் டும்... பாதகமில்லை..." என்றார் அந்த இரண் டாவது வித்வான்.

"ஏன்...?"

"ஸ்ரீ திருஷ்ணாய என்றால், ஸ்ரீயினிடத்திலே திருஷ்ணை உடையவன் என்று அர்த்தம்... (ஸ்ரீ-மகாலக்ஷ்மி; திருஷ்ணை-அன்பு.) அவர் சொல்வதும் பகவானையே குறிக்கும்..'' என்றார்.

இந்தக் கதைகளைச் சொல்வதாலே, மந்திரங்களை, பகவான் நாமத்தைத் தப்பும் தவறுமாகச் சொல்லலாம் என்று அர்த்தம் இல்லை. அறியாமையாலும் இயலாமையாலும் அவ்வாறு தவறாகச் சொன்னாலும், மனத் திலே அவன் நினைவு ஆத்மார்த்தமா இருந் தால், அதை அவன் அப்படியே ஏற்பான் என்கிறதுக்காகச் சொன்னது.

அடியேன் திருப்பதி போயிருந்த சமயம்... சுவாமி புஷ்கரணியில் ஸ்நானம் பண்ணப் போனேன். அப்போது அங்கே தெனாலியி லிருந்து வந்த ஒரு குடும்பம், முடி கொடுத்து விட்டு ஸ்நானம் பண்ணிக் கொண்டிருந்தது.

அந்த குடும்பத் தலைவர் முங்கி எழுந்து, தலைக்குமேல் கைகூப்பி ''கோஹிந்தா! கோஹிந்தா...!'' என்று பெருமாளை அழைத்துக் கொண்டிருந்தார்.

''கோஹிந்தா இல்லை; கோவிந்தான்னு சொல்லணும்...'' என்று அவரைத் திருத்த அடியேன் எழுந்தேன். அப்போது அவர் சொன்ன வார்த்தைகள் என்னை ஸ்தம்பித்துப் போகப் பண்ணின.

"ஏழுமலையானே! ஒவ்வொரு வருஷமும் இதே நாளில் உனக்கு வந்து முடிகொடுத்து விட்டு உன்னை சேவிச்சுட்டுப் போகிறேன். போன வருஷம் போலவே இந்த வருஷமும் நான் சந்தோஷமா இருக்க அனுக்கிரஹம் பண்ணு..." என்று உரக்க பிரார்த்தனை செய் தார் அந்த பக்தர்.

'அவரைத் திருத்தணும்' என்று எழுந்தவன் டன் அப்படியே உட்கார்ந்து விட்டேன். போன வருஷமும் அந்த பக்தர் 'கோஹிந்தா கோஹிந்தா'ன்னு தானே பகவானைக் கூப்பிட் டிருப்பார். அதற்காக பகவான் அவருக்கு அனுக்கிரஹம் பண்ணாமல் விட்டு விடவில் லையே... 'கோஹிந்தா'ன்னு சொன்னதற்கே ஒரு வருஷம் ஆனந்தமாக அவர் இருந்திருக்கிறாரே! இந்த வருஷமும் போன வருஷத்தைப் போன்ற சந்தோஷத்தைத் தானே பக்தர் கேட்கிறார்...!

- இதை உணர்ந்ததும், அவரைத் திருத் தணும் என்கிற என் எண்ணத்தை மாற்றிக்




கொண்டேன். எம்பெருமானுக்கு நம்மிடத்திலே என்ன வாத்ஸல்யம்! (கருணை) என்று சிலிர்ப்பு வந்தது.

பாண்டித்யம் இல்லாவிட்டாலும் பகவான் நாமத்தைச் சொல்லலாம். ஆனால் அதை இடைவிடாது சங்கீர்த்தனம் பண்ண ணும்னு போன வாரம் சொன்னது எப்படி சாத்தியப்படும்..?

இதற்குத்தான் நாம சங்கீர்த்தனத்தை நமக்கு வாழ்க்கை முறையாகவே வைத்திருக்கிறது.

பெருமாளை எழுந்தருளப் பண்ணுகிறவர் களுக்குத் தோளிலே காய்ந்துப் போயிருக்கும். அதுபோல நாம சங்கீர்த்தனத்தைப் பழக்கமா கப் பண்ணிக் கொள்ளணும். 'நாவிலேயே தழும்பு ஏற்பட்டுப்போகும் அளவுக்கு திருநா மத்தை உச்சாடணம் பண்ணணும்; எத்தனை தடவைன்னு கேட்கக் கூடாது' என்கிறார், திருமங்கையாழ்வார்.

தழும்பு எப்படி உண்டாகும்? மீண்டும் மீண் டும் சொல்வதால். அதற்குத்தான் நியமம் ஏற் பட்டிருக்கிறது.

எழுந்திருக்கும் போது - துயிலெழும்போது; 'ஹரீர் ஹரி:, ஹரீர் ஹரி:' என்று ஏழு தடவை சொல்ல வேண்டும்.

உரக்க, பெரிசா சொல்லணுமா? மனசுக்






"நல்ல காலம்! கருத்துக் கணிப்புல சொன்னபடியே நாம் தோத்துட்டோம்... இல்லைன்னா வாக்குறுதியை யெல்லாம் காப்பாத்த முயற்சி பண்ணணுமே...."

"புது முதலமைச்சர் சிக்கனத்தைக் கடைப்பிடிக்கணும்னு உத்தரவு போட்டிருக்கார். அதனால, இனிமே இந்த ஆபீஸ்ல உபயோகிக்கிற குண்டூசி, கிளிப்புக்கெல்லாம் விவரமா கணக்கு எழுதணும்..."

— இந்தியன் "ஃபீச்சர்ஸ் சிண்டிகேட்"

குள்ளே சொன்னால் போதாதா? மனசுக்குள்ளே சொன்னால் பலன் நமக்கு மட்டும். பெரிசா சொன்னா அக்கம்பக்கத்திலே இருப்போரும் அதைக் கேட்டபடி எழுந்திருப்பார்கள். பரோபகாரமாகவும் இருக்கும்.

வெளியிலே கிளம்பிப் போகும்போது 'கேசவா' என்று உச்சரிக்கணும்.

திருவனந்தபுரத்து அனந்த பத்மநாபசுவாமி குறித்து நம்மாழ்வார் பாடுகிறார்:

'கெடும் இடராயவெல்லாம் கேசவா
என்ன...'

'கேசவா' என்று சொன்னால் இடர்களெல்லாம் கெடுமாம். அதனால்தான் ஒரு காரியமாகப் புறப்படும் போது 'கேசவா' என்று அழைப்பது.

ஆண்டாள் இந்த அனுஷ்டானத்தைக் கடைப்பிடித்திருக்கிறார்.

'கேசவனைப் பாடவும் நீ கேட்டே கிடத்தியோ தேசமுடையாய் திறவேலோர் எம்பாவாய்...'

என்கிறது திருப்பாவை. 'கேசவா கேசவா' என்று பாடிக் கொண்டு புறப்பட்டுவிட்டோம்; நீ அதைக் கேட்டும் கிடந்துறங்குகிறாயே...' என்று துயிலெழுப்புகிறார்.

அடுத்தது: உணவு கொள்வதற்கு முன்னால் கோவிந்தா என்று சொல்லிவிட்டுச் சாப்பிட வேண்டும். கோவர்த்தன கிரியைக் குடையாய்ப் பிடித்த வனை இப்படி அழைப்பதன் மூலம் நித்ய அன்னம் கிடைக்க உத்தரவாதம் செய்து கொள் கிறோம்.

சிரமம் இல்லை, கஷ்டமான நியமமில்லை. ஹரி, கேசவா, கோவிந்தா, மாதவா என்று எளிய நாமங்களை நாம் தினமும் செய்கிற காரியங்களோடு சேர்த்து விட்டிருக்கறதாலே எந்தவித கூடுதல் முயற்சியுமில்லாமலே நாம சங்கீர்த்தனம் நடைபெற்று விடுகிறது.

ஆனால் சொல்கிற அந்த நேரத்திலே மனசு அளவு கடந்த பக்தியிலே நிரம்பியிருக்கணும். 'சொல்லிப் பார்ப்போமே, பலனிருக்கிறதாவென்று...' அப்படின்னு பரீட்சார்த்தமாகச் சொல்லக்கூடாது.

காரணம், அவனது நாமங்கள் சர்வ உத்தமமானவை: 'சர்வோத்தமஸ்ய கிருபையா...' சர்வ உத்தமமான அவனுடைய நாமங்களை நம்மை உச்சரிக்க வைப்பதும் அவனுடைய கிருபைதான்- கருணைதான்!

முதலிலே இந்த நித்ய காரியங்களுடனான நாம உச்சாடனத்தைப் பழகிக் கொண்டு விட்டால் மனசு மேலும் மேலும் அந்த சத் அனுபவத்தைக் கேட்கும். அந்த மனசுக்கு தெய்வானுபவம் தரக்கூடியதாய் அமையப் பெற்றது விஷ்ணு சஹஸ்ரநாமம்.

(தொடரும்)

# கொடூரக் கனவுகள்

திடீரென்று விழிப்புத் தட்டியது. என்ன கொடூரமான கனவு? கனவுதானா அது? சுற்றிலும் பார்த்துக் கொண்டான். திரைச்சீலைகள் அசைந்து கொண்டிருந்தன. இரவின் நிசப்தமும், அடர்த்தியும் ஜன்னலுக்கு வெளியே விரவிக் கிடந்தது. எழுந்து விளக்கைப் போட்டான். பரண்களிலும், ஷெல்புகளிலும் அடுக்கி வைக்கப்பட்ட தன் புத்தகங்களை ஸ்நேகத்துடன் பார்த்துப் பெருமூச்சு விட்டான். நல்ல வேளை கனவுதான். ஆனால் உலுக்கி எடுத்த கனவு!

காலிங்பெல் சத்தம் கேட்டு அவன் கதவைத் திறக்கிறான். முகமூடி போட்ட சிலர் உருட்டுக் கட்டைகளுடன் திபுதிபுவென்று உள்ளே நுழைகிறார்கள். அவன் கூக்குரலை அவர்கள் பொருட்படுத்தவில்லை. அலமாரிகளும் டிராயர்களிலும் தேடுகிறார்கள். அவனுக்கு சிரிப்பு வருகிறது. சரஸ்வதி கொலுவிருக்கும் வீட்டில் லட்சுமியைத் தேடுகிறார்கள். தரித்திரம் பிடித்த தமிழ் எழுத்தாளனின் அறையில் புத்தகங்களைத் தவிர ஏதுமில்லை. புத்தகங்கள் என்றால் எப்பேர்ப்பட்ட புத்தகங்கள்! இலக்கியம், ஆன்மீகம், மன இயல், தத்துவம்... எதுவும் கிடைக்காத ஆத்திரத்தில் அவர்கள் அந்த புத்தகங்களுக்குத் தீ வைத்துக் கொளுத்துகிறார்கள். அவனை நாற்காலியுடன் கட்டிப் போட்டு ஓடி விடுகிறார்கள். தீ சுற்றிலும் பரவுகிறது. நெருப்பின் சூடு தானாமல் விழிப்புத் தட்டிவிட்டது. நல்ல வேளை எல்லாம் கனவுதான். இப்போதெல்லாம் இப்படிப்பட்ட பயங்கரக் கனவுகள் அடிக்கடி வருகின்றன. சிறுவயது முதலே புத்தகங்களை நேசித்து சேகரிப்பவன் அவன். வீட்டை விட்டு விலகி வந்து இந்தத் தனியறையில் தானும் தன் புத்தகங்களுமாய் வாழ்கிறான்.

அவனை எல்லோரும் ஒரு மாதிரியாகவே பார்க்கிறார்கள்.



சரியான மனநிலையுடன் அவன் இல்லை என்பதே அக்கம் பக்கம் கிசுகிசுப்பு. ஆனாலும் தன்னுள் ஒளிர்கிற ஞானத்தைக் காணும் பக்குவம் பிறருக்கு இல்லையே என்பதுதான் அவனின் ஆதங்கம். ஏதேதோ சிந்தனைகளுடன் தூங்கிப் போனான் மனோகரன்.



காலையில் பல்துலக்கும் போது வந்த வீட்டுக்காரர், தம் மகளின் திருமணப் பத்திரிகையைத் தந்துவிட்டு, விரைவில் அறையை காலி செய்து தர வேண்டும் என்றும் சொல்லி விட்டார். இத்தனை பெரிய நகரில் மூவாயிரம் புத்தகங்களுடன் ஒரு பாச்சிலருக்கு யார் அறை தருவார்கள்? அதுவும் முந்நூறு ரூபாயில்? பிரமிப்பாக இருந்தது அவனுக்கு.

புது வீட்டிற்குப் புத்தகங்களைக் கொண்டு வந்தது ஒரு பெரும் பிரயாசை என்றால் அடுக்குவது அதிலும் பெரிய இம்சை. ஆனால் அப்போதுதான் அவனுக்கு ரஞ்சிதா அறிமுகமானாள். தன் தாயுடன் வாழ்கிற அவள் வீட்டின் ஒரு பகுதியில்தான் அவன் குடியேறினான். இத்தனை புத்தகங்களா என்று விழிகள் விரிய அவள் பார்த்த ஆச்சர்யப் பார்வை அவனை ஈர்த்தது. பட்டாம்பூச்சிகள் போல அவள் அழகிய கணகள் படபடத்தன.

"ஏன் சார்.... ரொம்பப் படிச்சா மூளை கெட்டுப் போயிடும்னு சொல்றாங்களே...?"

"தவறான கருத்து இது. நிறையப் படிக்கிறவங்க ரொம்பவும் 'சென்சிடிவ்' ஆக மாறுவாங்க. ரொம்பவும் நுட்பமான விஷயங்களையும் உணர்வாங்க. அன்னிக்குப் புத்தகங்களை அடுக்கும் போது கூலிக்காக அதை சுமந்து வந்தவங்க, அதை வெறும் காகிதக் கட்டாகத் தூக்கி வீசிவிட்டுப் போனாங்க. நான் அவுங்களைப் பார்த்து சத்தம் போட்டுத் திட்டினேன்! அவுங்க வெளியே போய் என்ன சொல்வாங்க?

**செந்தூரம் ஜெகதீஷ்**

'படிச்சு படிச்சு அந்த ஆளுக்கு மூளை கெட்டுப் போச்சுன்'னு சொல்வாங்க. இல்லையா? இதுவே ஒரு பணக்காரன் தன் வேலையாட்களை விரட்டினால் அப்படி சொல்வாங்களா? பணம் அவுங்க ஜீவனம்! புத்தகம்? Who cares?"

"நீங்க ரொம்ப வித்தியாமா இருக்கீங்க சார். வசதியிருந்தும் பணக்கார குடும்பத்தை உதறி, நிறைய படிச்சு, நல்லா பேசறீங்க!"

"ஆமாம். நான் வித்தியாசமானவன்தான். ஆனால் யாரும் என்னை சகிச்சுக்க மாட்டாங்க. உலகம் கணிதமாகிப் போச்சு. என்னுடைய உலகம் கவிதை மயமானது."

அவள் ஆபீசுக்குப் போன பிறகு மனோகரன் அவளைப் பற்றி யோசிக்கலானான். ஆர்வமான பெண். புத்தகங்களை அடுக்கி வைக்க உதவினாள் அவள். குழந்தைகளைப் போல அதை அடுக்கி வைத்ததும், பிரவுன் பேப்பர் கொண்டு வந்து சிலவற்றுக்கு அட்டை

போட்டுத் தந்ததும் ஒரு கலையாத சித்திரமாக மனத்தில் படிந்துவிட்டன. அவள் அழகிலும் தேவதைதான். வீட்டு வாடகையும் அவள் வருமானமும்தான். துணை வயதான அம்மா, திருமண கனவுகள்... பேசாமல் தானே அவளை மணந்து கொண்டால் என்ன? மார்க்சுக்கு ஒரு ஜென்னி போல் அவள் இருப்பாளா? புத்தகங்களை நேசிக்கக் கூடிய ஒரு ஆத்மா துணையாக அமைந்தால் அதுதான் எத்தனை சுகமானது! ஒரு பெண்ணின் நளினம்மிக்க விரல்களால் பதமாகக் கையாளப்படும் புத்தகம் தன்னுடையது என்ற நினைவோடு அந்த விரல்களும் தனக்கே சொந்தமானால் என்ன சந்தோஷம் அது! அப்பா! ரொம்பவும் யோசிப்பதுகூட சரியல்ல என்றெண்ணி, சட்டென்று அவன் முடிவுக்கு வந்துவிட்டான். ரஞ்சிதா ஆபீசிலிருந்து திரும்பியதும் இன்று அவளிடம் பேசிவிட வேண்டும்.

“சொல்லுங்க மனோ, என்ன விஷயம்?” மனோகரன் அவளை நிமிர்ந்து பார்த்தான். ஆபீசில் வேலை செய்த அலுப்பிருந்தாலும் குறையாத அழகுடன் இருந்தாள். பேச வேண்டும் என்று சொன்னதும் முகம் கழுவி அவன் அறைக்கு வந்து விட்டாள். உரிமையுடன் நாற்காலியை இழுத்து அமர்ந்தாள். அவள் நேரிடையாக விஷயத்துக்கு வந்து விட்டாள். ஆழமான கண்களால் ஒரு கணம் ஊடுருவி அவனைப் பார்த்து விட்டு அவள் சொன்னாள். “ஸாரி மனோ சார். என்னால் சம்மதிக்க முடியாது. நீங்க பெரிய எழுத்தாளர். நிறையப் படிச்சவர். உங்கள் உலகம் கவிதை மயமான உலகம். எனக்குப் புரியுது. ஆனால்... என்னுடைய உலகம் கணிதமானதுதான் சார்.

“எனக்கு ஒரு கணவர் தேவைதான். ஆனால் அவருக்கு என்னைத் தவிர வேறு உலகம் தெரியக் கூடாது. உங்களுக்கு ஏற்கெனவே விசாலமான ஒரு உலகம் வாய்த்திருக்கு. என் கணவர் எனக்குக் கவிதை படிச்சு விவாதிக்கக் கூடியவரா இல்லைன்னா பரவாயில்லை. ஆனால் புதுசா வந்த சினிமாவுக்குக் கூட்டிட்டுப் போறவராவும் புதுசு புதுசா புடவை எடுத்துத் தர்றவராகவும் இருக்கணும். என் குழந்தைகளைப் படிக்க வைக்கக் கூடியவரா, என் வருங்காலம் பற்றி யோசிப்பவராக இருக்கணும்... ஸாரி நான் உங்க மேல் ரொம்ப மரியாதை வச்சிருக்கேன். ஆனால் நிச்சயமா நீங்களும் நானும் கல்யாணம் செஞ்சுக்க முடியாது.”

“ரஞ்சிதா...”

“ஸாரி சார். என் கற்பனைகளிலும் கவிதை இருக்கு சார். ஆனால் ஊரோடு ஒத்து வாழ்ற வாழ்க்கைதான் சார் என்னுடையது. நீங்க என் மேல் ஆசைப்பட்டதே எனக்கு ரொம்பவும் பெருமையான விஷயம்... ஆனால்...”

நாற்காலியை விட்டு எழுந்த அவள், “ஸாரி சார்” என்றபடி மல்லிகை மணம், மேனி வாடை, புடவை சலசலப்பு, கொலுசுச் சத்தம் யாவும் மறைய மறைய அவசரமாகப் படியிறங்கிப் போய்விட்டாள். குபுக்கென்று கண்களில் பொங்கி வழிந்தது. நிற்க முடியாமல் சரிந்து கட்டிலில் விழுந்தான். தூங்கினால் மறுபடியும் பயங்கரக் கனவுகள் வருமோ என்ற கலக்கத்துடன் அவன் விழித்துக் கொண்டே சப்தமின்றி அழுதான்.



“நம்ம மாலா ஏக குஷியா போறாளே... என்னடி விசேஷம்?”

“அவ மாமியாரு வோட்டு போட்ட வேட்பாளரு மண்ணைக் கவ்விட்டாராம்!”

— பி.ஜி.பி. இசக்கி

“தலைமைச் செயலகத்தின் முன் கோஷ்டியா, யாரோ உண்ணாவிரதம் இருக்காங்களே, எதுக்காக?”

“அவங்க கட்-அவுட் செய்து ஐந்து வருஷமா பிழைப்பு நடத்தினவங்களாம்... அவங்களுக்கு பென்ஷன் கொடுக்கணும்னு புது அரசிடம் கோரிக்கை வைக்கறாங்க!”

— து. பூவராகன்



# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1996



**முதல் பரிசு ரூ. 1,500**

**இரண்டாவது பரிசு**

**ரூ. 1,000**

**மூன்றாவது பரிசு**

**(இரு கதைகளுக்குத் தலா ரூ. 500 வீதம்)**

**ரூ. 1,000**

**ஆக மொத்தம் ரூ. 3,500 பரிசுகளாக வழங்கப் பெறும்.**

தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 150 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்கு போனஸ் உண்டு.

● கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.

● அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதி மொழி தரவேண்டும்.

● நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

**கதைகளை அனுப்ப வேண்டிய கடைசித் தேதி : ஜூன் 15.**

● உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.

● பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய அளவு தபால் தலை ஒட்டிய, சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.

● கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

● எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.

● சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

● போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 4 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.

● எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

**ஆசிரியர், கல்கி,**
**47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல்,**
**சென்னை — 600 097.**

# குமுறல்



# பொறுப்பான பதவியில் பொறுப்பற்ற பேச்சு!

**த**மிழ்நாடு எய்ட்ஸ் செல் (AIDS CELL) லிருந்து எங்கள் அலுவலகத்துக்கு வந்த டாக்டர் காந்தராஜ், கூடியிருந்த அலுவலர்களிடம் எய்ட்ஸ் நோயின் தன்மை, அது வராமல் செய்ய வேண்டிய உபாயங்களைக் கூறியவர், இடையிடையே தேவையின்றி இந்துக் கடவுள்களைப் பற்றி இழிவாகப் பேசினார். தன் மனைவியை விட்டு விட்டு லக்ஷ்மணன், ராமர் சீதையோடு காட்டுக்குப் போனதை வக்கிரமாக விமர்சித்தார். பிறகு கிருஷ்ணருக்கும் AIDS நோய் இருந்திருக்க வேண்டும் என்றும், அதன் காரணத்தால்தான் அவருக்குப் பிள்ளை கிடையாது என்றும்(!), மிகவும் பலவீனப்பட்டதால் ஒரு அம்பு காலில் பட்டவுடன் இறந்தார் என்றும் பிதற்றினார். நாங்கள் அருவருப்புடன் அவரைப் பார்த்த போது, தான் ஒரு பக்தியுள்ள இந்துதான் என்று வேறு கூறிக் கொண்டார். எப்படி இருக்கிறது இந்தப் பொறுப்பான பதவியிலுள்ள டாக்டரின் பேச்சு!

சென்னை - 94, டாக்டர். ஆர்.கே. நடராஜன்.

## விவசாயிகளின் வேதனைக் குரல்கள்....

**ஆ**ம்பூர் கூட்டுறவு சர்க்கரை ஆலைப் பகுதியில் விவசாயிகள் சாகுபடியான கரும்புக்கு வெட்டுத்தரவு கிடைக்காமல் படும் அவல நிலையை நினைத்தால் கண்கள் கசியும். மறுதாம்பு பயிர் கூட 14 மாதங்களுக்கு மேலாகியும், மணவாழ்வை எதிர் நோக்கும் முதிர் கன்னிகள் போல், விளைந்து வீணாகிக் கொண்டிருக்கிறது. சென்ற ஆண்டைப் போலவே தண்ணீர் தட்டுப்பாடு பெருகிட விவசாயிகள் கண்ணீரைக் கொண்டா பாய்ச்ச முடியும். இந்த தாமதத்திற்கான காரணம்: இரண்டு கேரியர் மூலம் எடுத்தாளப்பட்ட கரும்புகள் தற்போது சில வருடமாக ஒரே கேரியர் பயன்படுத்தப்படுகிறது. புதிய தி.மு.க. அரசாவது இரு கேரியர்களை இயக்க ஆவன செய்து, முறையான பருவத்திலேயே கரும்பு வெட்டு உத்தரவை ஆலை நிர்வாகம் வழங்கிட ஆவன செய்யுமா?

மேல்பட்டி, எல். மாறன்.

## சரித்திரப் புகழும் சரியில்லாத உச்சரிப்பும்:

**நெ**ல்லை பாராளுமன்ற தொகுதிக்கு உட்பட்ட சட்ட மன்றத் தொகுதி ஒட்டப்பிடாரம். கெக்கிழுத்த செம்மல் வ.உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் பிறந்த புண்ணிய பூமி. இந்த புகழ் பெற்ற ஊரின் பெயரை தேர்தல் முடிவுகள் அறிவிக்கின்ற பொழுது பல முறை ஒட்டப்பிடாரம் என்றே சென்னை தொலைக் காட்சியினர் வாசித்தனர். இவ்வளவு சரித்திரப் புகழ் பெற்ற ஊரின் பெயரினை சரியாக உச்சரிக்க நிலையத்தார் முயற்சி எடுக்காதது வருந்தத் தக்கது.

வேம்பார், எஸ்.எஸ். வள்ளுவன்.

## ஒளிபரப்பு படுமோசம்!

**எ**ங்கள் பகுதி, நெய்வேலி தொலைக் காட்சி அஞ்சல் பிரிவைச் சார்ந்தது. ஒளி பரப்பு மிகவும் மோசமாக உள்ளது. கறுப்புக் கோடு பட்டையாகத் தொடர்ந்து செல்கிறது. சில சமயம் படமே சுத்தமாகத் தெரியாது. நெய்வேலி தொலைக்காட்சி அஞ்சல் நிலையத்தில் ஏதும் ஒளிபரப்பு தவறுகள் இருந்தால், மேலிடத்தினர் கவனித்து அதனைச் செப்பனிட்டு, எங்களுக்கு நல்ல டீ.வி. நிகழ்ச்சிகளை வழங்குவார்களா? எங்கள் கிராமத்தில் தனியார் டீ.வி. சானல்களைப் பார்க்கவும் வசதி இல்லை. டிடி-1 ஒன்று மட்டுமே.

ஆத்தூர், எஸ். லலிதா.



• துதாயெவ்

# போன் பேசும் போது கொன்றார்கள்!

இப்போதைக்கு ரஷ்ய அதிபர் யெல்ட்ஸினின் தீராத தலைவலி செசன்யா (Chechenya). உண்மையைச் சொல்வதானால் 1991 - ல் அவரே வரவழைத்துக் கொண்ட தலைவலி.

'உங்களால் எவ்வளவு ஜீரணிக்க முடியுமோ அவ்வளவுக்கு தனியாட்சி உரிமையை எடுத்துக் கொள்ளுங்கள்' என்று பிரிந்து போன சோவியத் யூனியன் பகுதிகளிடம் சூரத்தனமாகப் பிரகடனப் படுத்தினார் யெல்ட் ஸின்.

'சரி, எடுத்துக் கொள்கிறேன்' என்று தன்னை ஒரு சுதந்தர நாடாகவே பிரகடனப் படுத்திக் கொண்டு விட்டது செசன்யா!

யெல்ட்ஸினால் அவ்வளவு சுலபமாக செசன்யாவை, 'போகட்டும்' என்று கைகழுவிவிட முடியாது. ஏனெனில் ரஷ்யாவின் பொருளாதார முதுகெலும்புக்கு செசன்யா முக்கியம். அஜெர்பெய்ஜானில் உள்ள வளமிக்க எண்ணெய்க் கிணறுகளிலிருந்து ரஷ்யாவின் கருங்கடல் எல்லைக்கு எண்ணெய் சுமந்து வரும் குழாய்கள் செசன்யா வழியாகத்தான் போகின்றன. அதனால் அங்கே புரட்சியை ஒடுக்கி, செசன்யாவை தன் கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டாக வேண்டும் என்கிற அவசியம்.

செசன்யாவில் புரட்சிக்குத் தலைமை தாங்கியவர் துதாயெவ். ஓய்வு பெற்ற ஜெனரல்.

'மயிலே மயிலே என்றால் துதாயெவ் மயில், இறகு போடாது' என்பது யெல்ட்ஸினுக்கு நன்றாகவே தெரியும். தம் ராணுவத்தை ஏவி விட்டார். 1994 டிசம்பர் 11ம் தேதி, செசன்யாவில் ரஷ்ய ராணுவம் நுழைந்தது.

புரட்சிக்காரர்கள் போரிட சளைக்கவில்லை. சாகவும்தான்! ரஷ்ய ராணுவம் சிவிலியன்களையும் விட்டு வைக்கவில்லை. ஒரு கட்டத்தில் 'நம் மக்களை நம் மண்ணில் நாமே கொல்வதா?' என்ற ஞானோதயமும் ராணுவ உயர் அதிகாரிகளிடம் பிறந்தது.

தம் ஆணைக்குக் கட்டுப்பட மறுத்த தளபதிகளை டிஸ்மிஸ் செய்தார் யெல்ட்ஸின். விசாரணைக் கூண்டில் ஏற்றினார்.

இதுவரை நாற்பதாயிரம் போராளிகளும், ஐம்பதாயிரம் பொதுமக்களும் இறந்து போயிருக்கிறார்கள்.

"இதே யெல்ட்ஸின் அதிபராக நாங்கள் அப்போது தேர்தலில் வாக்களித்தோம். இப்போது தெரிகிறது அது அவருக்குப் போட்ட வாக்கு அல்ல; எங்கள் சாவுக்கு நாங்களே போட்டுக் கொண்ட வாக்கு." செசன்ய மக்களின் குமுறல் இது.

செசன்ய தலைநகர் குரோஸ்னியைக் கைப்பற்றி, தமக்கு சலாம் போடும் ஒரு கைப்பாவை அரசை அங்கே நிறுவினார் ரஷ்ய அதிபர்.

கூடவே துதாயெவ் அவர்களோடு பேச்சுவார்த்தை நடத்த ஏற்பாடுகளும் செய்து கொண்டிருப்பதாக வேஷம் போட்டார். அதை சீரியஸாக எடுத்துக் கொண்ட துதாயெவ் தினமும் மாஸ்கோவுடன் தம் செல்லுலர் போனில் தொடர்பு கொண்டு பேச்சுவார்த்தை ஏற்பாடுகளைக் கேட்டறிந்தார். அப்படி ஒரு நாள் பேசிக் கொண்டிருந்த போது ஒரு ராக்கெட் வந்து அவரைத் தாக்கியது. அவர் கொடூரமாகக் கொல்லப்பட்டார்.

யெல்ட்ஸினின் திட்டமிட்ட தாக்குதல் இது என்கிறார்கள் செசன்ய புரட்சியாளர்கள். மாஸ்கோ இதை மறுக்காமல் இருக்குமா? மறுத்தது. அந்த ராக்கெட், துதாயெவ் பயன்படுத்திய செல்லுலர் டெலிபோனின் மின் ஒலி அலைகளை மோப்பம் பிடித் துக் கொண்டே வந்து அவரை நேரடியாகத் தாக்கும்படி துல்லியமாகத் திட்டமிட்டிருக்கிறார்கள் என்றும் ஒரு கருத்து நிலவுகிறது.

அவருக்குப்பின் அவரது உதவியாளர் ஸெலீம்கான் யாந்தர்பியேவ் புரட்சிக்குத் தளபதியானார். திடீரென அவரும் கொல்லப்பட்டதாக சில நாட்கள் முன் செய்தி பரவியது. ஆனால் அது வதந்தி. தாம் உயிரோடு இருப்பதை யாந்தர்பியேவே மக்கள் முன் தோன்றி உறுதிப் படுத்தினார்!

ஜூன் மாதம் 16-ம் தேதி ரஷ்ய அதிபர் தேர்தல். செசன்யாவில் யுத்தம் செய்து கொண்டே சத்தியமாக யெல்ட்ஸினால் தேர்தலில் ஜெயிக்க முடியாது. செசன்யாவோ தன் புரட்சி தளபதியை இழந்து இப்போது ரஷ்ய ராணுவத்தைப் பழிவாங்கத் தொடங்கியிருக்கிறது.

'இத்தகைய போர்ச் சூழலில் இப்போதைக்கு தேர்தல் வேண்டாம்' என்று எலெக்ஷனை தள்ளிப் போடுவதும் யெல்ட்ஸின் ஒரு யுக்தியாக இருக்கலாம்.

— ராணிமைந்தன்

# துணுக்கள்

● செல்லபாபுவுக்கு வயது 75. கபிஸ்தலம் கிராமத்தில் வசிக்கும் இந்த அம்மையாருக்கு சமீபத்தில் ஒரு பல் விழுந்து விட்டது. அதே இடத்தில் மீண்டும் பல் முளைத்து வருகிறது! இவர் காலை 7 மணிக்கு எழுந்து மாலை 6 மணி வரை நின்று கொண்டே பட்டு நூல் இழைக்கும் வேலையையும் செய்து அந்த வருமானத்தைத் தம் சொந்த செலவுகளுக்குப் பயன்படுத்துகிறார்.

தகவல் : டி.எம். முருகானந்தம்

● காரி டாக்கரி நியூயார்க்கைச் சேர்ந்தவர். இவரை 17.9.88 அன்று குடிபோதையில் ஒருவர் தலையில் சுட்டார். ரத்த வெள்ளத்தில் கிடந்த இவரை அவர் நண்பர் மருத்துவமனையில் சேர்த்தார். 7 ஆண்டுகளாய் கோமாவில் கிடந்த இவர் சமீபத்தில் நினைவு திரும்பப் பெற்றார். தமது இரு மகன்களையும் அடையாளம் கண்டுகொண்டதுடன், ஜோக்குகளும் அடிக்க ஆரம்பித்து விட்டார்! மருத்துவ சரித்திரத்தில் எப்போதாவது இப்படி நடப்பதுண்டு என்று டாக்டர்கள் கூறினர்.

ஆதாரம் : இந்தியன் எக்ஸ்பிரஸ்

தகவல் : ஆர். ஸ்ரீகாந்தன்

● தொழிலாளர்கள் தங்கள் கோரிக்கைகளைப் பெறக் கையாளும் வேலை நிறுத்தம் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தொடங்கியதாகும். எகிப்தில் பிரமிட்களை கட்டிய தொழிலாளர்கள் தங்களுக்கு உணவாகக் கொடுக்கப்படும் கஞ்சிக்குத் தொட்டுக் கொள்ள கொஞ்சம் பூண்டு தர வேண்டுமென்று கேட்டதை நிர்வாகம் மறுக்கவே, வேலை நிறுத்தம் செய்து வெற்றி பெற்றனர். இந்தியாவில் முதல் வேலை நிறுத்தம் 1827-ல் கல்கத்தாவில் நடந்தது. பிரிட்டிஷ் ஆட்சியாளர்கள், பல்லக்குத் தூக்கும் ஆட்களுக்கு நியாயமான கூலி தராமல் ஏமாற்றினர். இதை எதிர்த்து அவர்கள் வேலை நிறுத்தம் செய்து வெற்றி பெற்றனர்.

ஆதாரம் : சுவையான செய்திகள்

தகவல் : எஸ். எஸ். பூங்கதிர்

● சதா சலசலவென்று பேசிக் கொண்டே இருக்காதே. அது பிழை. பேச்சு குறைவாகவும், செய்கை அதிகமாகவும் இருக்க வேண்டும். சதா ஒலித்துக் கொண்டே இருக்கின்ற தண்டை, சிலம்பு முதலிய அணிகலன்கள் காலில் கிடக்கின்றன. மௌனமாகவுள்ள அணிகலன்கள் கழுத்திலும் தலையிலும் அணியப்படுகின்றன. — வாரியார்.

தகவல் : வயலூர் ஆர். பார்த்திபன்

● காதினுள் உள்ள ஒலிவாங்கி நல்ல நிலையில் இயங்க வேண்டுமெனில் சிலிகானும், அயோடினும் தேவை. இந்த இரண்டும் முள்ளங்கியின் தோல் பகுதியில் உள்ளன. எனவே சமைக்கும் போது முள்ளங்கியின் தோலைச் சீவாதீர்கள்.

ஆதாரம் : மருத்துவர்

● வால்ட்டிஸ்னியின் திரைப்படங்களை இந்தியாவில் வெளியிடும் உரிமையை மோடி பிலிம் இண்டர்நேஷனல் நிறுவனம் பெற்றுள்ளது. இதன் அடிப்படையில் வரும் டிசம்பர் மாதம் 23-ம் தேதி வால்ட்டிஸ்னியின் விருது பெற்ற அலாடின் (ALADDIN) என்ற திரைப்படம் இந்தி, தமிழ், தெலுங்கு, மொழிகளில் டப்பிங் செய்யப்பட்டு ஒரே நேரத்தில் திரையிடப்படவுள்ளது. ஒரு அமெரிக்கத் திரைப்படம் இந்திய மொழிகளில் டப்பிங் செய்யப்படப் போவது இதுவே முதல் முறை.

ஆதாரம் : பிஸினஸ் லைன்



● சுவீடனில் ஆறு கொள்ளைக்காரர்கள் சேர்ந்து நாலே நிமிடத்தில் மூன்று வங்கிகளைக் கொள்ளை அடித்துள்ளனர். இது ஓர் உலக சாதனையாகும். மாலை 3.56 க்கு 'கோடா பேங்கன்' என்ற ஒதுக்குப்புற கிராம பேங்க்கில் கொள்ளை அடிக்கத் தொடங்கி, தொடர்ந்து, அதே தெருவிலுள்ள கப்பர் பேங்கன் மற்றும் பேர்னிங் பேங்கன் ஆகிய



வற்றையும் அவர்கள் கொள்ளை அடித்து விட்டு வெளியே வரும்போது நாலு மணி!

ஆதாரம் : இந்தியன் எக்ஸ்பிரஸ்
தகவல்கள் : கோவி. ராஜேந்திரன்

● தோள் பட்டை வரை முடியை டிரிம்மாக வெட்டுமாறு சொன்னார், மேரிலின். 41 வயது பெண்மணி. அதைக் காதில் வாங்காமல் முடி திருத்துபவர் வெட்டிக் கொண்டே போனார். அது பங்க் கிராப்பாக மாறி அவர் அழகைக் கெடுத்து, நல்ல வேலை கிடைக்காமல் செய்து, அதன் விளைவாக அவர் உடல் ஆரோக்கியமும் கெட்டு விட்டது. அந்த சிகையலங்காரக் கலைஞர் மீது வழக்குத் தொடுத்த மேரிலின், 75,000 டாலர் நஷ்டஈடு கேட்டிருக்கிறார்.

ஆதாரம் : அமெரிக்கச் செய்தி
"டெலிகிராஃப்"
தகவல் : ஆர். எஸ். கிருஷ்ணன்

● முகப்பரு இருக்கிறதா? ஒரு சங்கை எடுங்கள். கல்லில் சிறிது தண்ணீர் விட்டு அதில் சங்கை உரசுங்கள். சுண்ணாம்பு போல வரும். அதை முகப்பரு உள்ள இடத்தில் தடவுங்கள். காயவிடுங்கள். முகப்பரு இருந்த இடம் தெரியாது போய் விடும்.

● வரலாற்றில் மிகப் பெரிய அறிஞர்களாகக் கருதப்படும் ஹோமருக்கும் சாக்ரடீசிற்கும் எழுதவோ, படிக்கவோ தெரியாது. அவர்கள் கூறியதைப் பிறர் கேட்டு எழுதியவைதான் இன்று உள்ள அவர்களது சிந்தனைகள்.

'அரிய செய்திகள்' நூலிலிருந்து.

● சிறிய மீன்களுக்குப் பேசக் கற்றுக் கொடுத்தால், அவை தங்களைத் திமிங்கலங்கள் என்று நினைத்துக் கொண்டு பேசத் துவங்கும்!

ஆதாரம் : ஆலிவர் கோல்டு ஸ்மித்
தகவல்கள் : பா. குணா

● உழைத்து ஓடாகப் போனதாகச் சிலர் அலுத்துக் கொள்கிறார்களே... உண்மையில் ஒருவர் உழைப்பது அவரது ஆயுளில் ஐந்தில் ஒரு பகுதி ஆண்டுகள்தான். ஒருவர் 65 ஆண்டுகள் வாழ்ந்தால், தூக்கத்தில் 25 ஆண்டுகள் போய் விடுகிறது. சாப்பிடுவதற்கு 6 ஆண்டு, பொழுதுபோக்கில் 8 ஆண்டு, ஆடை அணிவதிலும், அலங்காரத்திலும் 5 ஆண்டு. நோயில் படுப்பது 3 ஆண்டு, அரட்டையில் 6 ஆண்டு என்று ஆராய்ந்து கண்டுபிடித்திருக்கிறார்கள். மீதி உழைப்பது 13 ஆண்டுதான்!

ஆதாரம் : 'நூறு உண்மைகள்' நூலிலிருந்து
தகவல் : ஆர். பார்த்திபன்

● 'என்னுடையது' என்று எதையெல்லாம் நீங்கள் எண்ணிக் கொண்டிருக்கிறீர்களோ, அதையெல்லாம் வரிசையாக எழுதுங்கள். என் பேனா, என் புடைவை, என் கடிதம், என் வீடு, என் நிலம் என்று எழுதிக் கொண்டே போங்கள். ஒன்றைக் கூட விடாதீர்கள். லிஸ்ட் எவ்வளவு நீளம் வருகிறதோ, அவ்வளவு தூரம்தான் கடவுளுக்கும் உங்களுக்கும் இடையே உள்ள தூரம்!

ஆதாரம் : சுவாமி சின்மயானந்தா
தகவல் : பி. ராஜசேகரன்

● எந்த நிமிஷம் வளர்ந்து முன்னேறுவதை நிறுத்துகிறேமோ அதே நிமிஷம் பின்வாங்குகிறோம். எந்த நிமிஷம் நாம் வாழ்க்கையில் திருப்தி காண்கிறோமோ, எந்த நிமிஷம் நம்மிடம் மெய்வேட்கை இல்லையோ, அதே நிமிஷம் மரண வழி நடக்கத் தொடங்குகிறோம். ஓய்வெடுப்பதைப் போன்ற ஆபத்தை வேறெதிலும் காண முடியாது. பேரருளில் நமக்குள்ள பூரண சிரத்தையிலும், ஆசாபாசங்கள் இல்லாமையிலும், ஆணவத்தின் மீது கொண்ட வெற்றியிலுமே உண்மையான ஓய்வைக் காணலாம்.

ஆதாரம் : 'ஸ்ரீ அன்னை உரையாடல்'
நூலிலிருந்து தகவல் :
கி. மனோகரன்

துணுக்க

# ஆடிய ஆட்டம்

## நீங்கள் கேட்டவை



• நடுநிலை...



• ...பிறழாமல்...



• ஒத்துழைக்க...



• ... வேண்டும்

● ஏ. ஹாசன் முகமது, சேலம்.

? தி.மு.க. தலைவர் மு.க., தமிழக முதல்வர் மு.க.- இந்த இருவரில் எந்த மு.கருணாநிதியை தங்களுக்குப் பிடிக்கும்...?

! இலக்கிய மு.க.வை விட்டுவிட்டீர்களே! மூவரையுமே பல தருணங்களில் பிடிக்கும்... சில சமயம் பிடிக்காமலும் போகும்!

● ஆர்.வி.ஏ.எஸ்.விஷ்ணு தேவி, கோவில்பட்டி.

? பணிவிடை செய்ய, வீட்டு வேலை பார்க்க, துதிபாட என்று இனி எத்தனை முன்னாள் அமைச்சர்கள் ஜெ. பின்னால் போவார்கள்...?

! 'தோற்றுப் போனால் என்ன! போயஸ் தோட்டத்தில் வேலைக்காரனாகவோ காவல்காரனாகவோ இருப்பேன்' என்று யாருமே அறிக்கை விடவில்லையே...! ஜெ கவனிக்க!

● கே. இரமேஷ பாபு, சேலம்-1.

? 'திகார் ஜெயிலுக்கு வெளியேதான் கிரிமினல்கள் அதிகம்' என கிரண்பேடி கூறியுள்ளாரே?

! அது உண்மையெனில், அது காவல்துறையினருக்குப் பெருமை சேர்க்கும் விஷயம் இல்லை.

● இர. ரூபன், கோபாலசமுத்திரம்.

? 'மூப்பனார் அணி வெற்றிக்குப் பாதை அமைத்தவன் நான்தான்' என்று குமரி அனந்தன் கூறியிருப்பது...?

! உண்மைதானே! குமரியார் அவ்வளவு அசிங்கமாக நடந்து கொண்டது மூப்பனார் காங்கிரஸின் வெற்றிக்குப் பெரிதும் உதவத்தானே செய்தது.

● வடவள்ளி ராமசுப்ரமணியன்.

? சோப் ஆபரா (Soap opera) என்றால் என்ன...? கொஞ்சம் விளக்குங்களேன்.

! ஆரம்பத்தில், அமெரிக்காவில் சோப்பு தயாரிக்கும் நிறுவனங்கள் 'ஸ்பான்ஸர்' செய்த டி.வி. தொடர் நாடகங்கள் இப்பெயர் பெற்றன. பின்னர் அந்தப் பெயரே நிலைத்து விட்டது. ஒரு குறிப்பிட்ட ஃபார்முலாவில் அடங்கும் படியாக, சென்டிமெண்ட் நிரம்பி, 'தொடரும்' முடிவுடன் அமையும் தொடர்கள்- உள்ளூர் உதாரணங்கள்: ஜுனூன், கையளவு மனசு, போன்றவை...

● வி.பி. மகாராசி, மதுரை.

? தேர்தல் முடிவுகளை வெளியிட்டதில் சிறப்பாகச் செயல்பட்டதற்காக, எந்த டி.விக்கு உங்கள் வோட்டு...?

! மாநில அளவில் சன் டி.வி; தேசிய அளவில் தூர்தர்ஷனில் பிரணாய் ராய் தலைமையில் அமைந்த நடுநிலை பிறழாத தொடர் நிகழ்ச்சி. குறிப்பாக ராஜ்தீப் சர்தேசாய் என்ற இளம் நிருபரின் ஆணித்தரமான, சரளமான ரிப்போர்டிங்- ( இவர் கிரிக்கெட் வீரர் திலீப் சர்தேசாயின் மகன்). கடந்த முறையைக் காட்டிலும் இம்முறை நிகழ்ச்சியில் பன் மடங்கு முன்னேற்றம். முன்னேறாதது அரசியலும் அரசியல் சூழலும் தான்!

● எல். எம். அபிநாட்சயா, மதுரை-16.

? கட்சி நலன் கருதி இனி ஜெயலலிதா என்ன செய்வது நல்லது...?

! அபத்தமான பேட்டிகள் கொடுக்காமல் கொஞ்சம் நாளைக்கு மௌனமாய் இருப்பதே நல்லது.

● எம். அசோக்ராஜா, திருச்சி - 15.

? தேர்தல் முடிவுகளில் உங்களை அ) ஆச்சரியப்பட வைத்த முடிவு எது? ஆ) அதிர்ச்சியடைய வைத்த முடிவு எது? இ) எதிர்பார்த்த முடிவு எது? ஈ) எதிர்பாராத முடிவு எது?

! அ) பர்கூர் ஆ) அறந்தாங்கி இ) நாடாளுமன்றம் ஈ) திருச்சூர்.

● எஸ். அருள்மொழி, காட்டூர்.

? உங்களைப் போன்ற பத்திரிகையாளர்கள் ரஜினிக்கு முக்கியத்துவம் கொடுத்தது காலத்தின் கட்டாயத்தினாலா?

! சில நிபந்தனைகளோடு தரப்பட்ட அந்த முக்கியத்துவம் அவர் மேலிருந்த நம்பிக்கையினால்.

● என். செல் \ கொப்பம்பட்டி.

? 1991ல் கா. ரஸ்-அ.தி.மு.க. அமோக வெற்றிக்கும் 1996ல் த.மா. கா.-தி.மு.க. அமோக வெற்றிக்கும் உள்ள வித்தியாசம் என்ன?

! அது ஒரு மயக்கத்தில் மக்களால தரப்பட்ட வெற்றி; இது மயக்கம் தெளிந்த மக்கள் விளைவித்த வெற்றி!

● டி. சத்யபாமா, கோவில்பட்டி.

? 'ஆடிய ஆட்டம் என்ன...?'

! 'ஆட்டம் ஓய்ந்தது இனி



• உண்மை விளம்பி • பெருமையில்லை!

ரூ. 25 பரிசு பெறுபவர் ❑
ந. சிவாயமூர்த்தி,
33, கம்பர் வீதி, பெருந்துறை - 638 052.

ஓட்டம்தான்' என்ற 'பேனர்' வாசகத்தை தி.மு.க.வினரே வெள்ளை அடித்து அழித்து வரும்போது நாம் அதைப் பெரிதுபடுத்துவானேன்.

● பி. உதயகுமார், சென்னை – 2.

? தேர்தலில் தில்லுமுல்லு நடந்ததால்தான் தாம் தோற்றுவிட்டதாக ஜெயலலிதா கூறுவது...?

! தாம் முதல்வராக இருந்தபோது தம் மாநிலத்தில் தில்லுமுல்லு நடந்ததாக அவரே கூறும் அபத்தம் ஒருபுறம்... அப்படி நடந்திருந்தால் அதற்கு அவர்தானே பொறுப்பு ஏற்க வேண்டும்!

● எஸ். தாரம்புநாதன், சின்னகாஞ்சிபுரம்.

? ரஜினி ஆதரவு இல்லாமல், தி.மு.க. போட்டியிட்டிருந்தால் வெற்றி பெற்றிருக்குமா...?

!வெற்றி உறுதிதான்; ஆனால் இத்தனை பெரிய மெஜாரிட்டி கிடைத்திருக்காது.

● இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

? புதிதாகப் பதவியேற்றிருக்கும் தமிழக அமைச்சரவை குறித்து...?

! பி.டி.ஆர். பழனிவேல்ராஜன், பரிதி இளம் வழுதி போன்றவர்கள் விடுபட்டுப்போனது கொஞ்சம் வருத்தம்தான். ஆனால், கருணாநிதியே சொல்லியிருப்பதுபோல், எல்லோருக்கும் வாய்ப்புத் தருவதென்பது இயலாத காரியம். ஏதேனும் அதிருப்தி இருந்தாலும் துடைத்தெறிந்துவிட்டு அனைவரும் ஒத்துழைத்து நல்ல விளைவுகளுக்காகப் பாடுபட வேண்டிய தருணம் இது.

● ந.சிவாயமூர்த்தி, பெருந்துறை. ❑

? என்.டி.. ஆரின் அரசியல் வாரிசு நாயுடு என்று ஆகிவிட்டதே..? இனி லட்சுமிபார்வதி நிலைமை என்ன...?

! அம்மகாரு நிலைமை பரிதாபம்தான். என்.டி..ஆரை முதுகில் குத்திய நாயுடுவுக்கு அதிக இடங்கள் கிடைத்து, அவரே 'உண்மையான வாரிசு' என்ற அபத்தமான நிலையை உருவாக்கக் காரணமாக இருந்தது காங்கிரஸ் தான்! தெலுங்கு தேசத்தில் பிளவு ஏற்பட்ட போது, நாம் சொன்னதுபோல் காங்கிரஸ் மட்டும் லஷ்மி பார்வதியுடன் கூட்டு வைத்துக் கொண்டிருந்தால் பார்வதி அணிக்கு என்.டி. ஆரின் உண்மையான வாரிசு கட்சி என்ற அங்கீகாரமும் கிடைத்திருக்கும்; காங்கிரஸுக்குத் தேர்தலில் மேலும் கணிசமான இடங்களும் கிடைத்திருக்கும். ஒரு நல்ல வாய்ப்பை இழந்துவிட்டது காங்கிரஸ். தமிழ்நாட்டுச் சொதப்பலுக்கு அடுத்தபடியானது காங்கிரஸின் ஆந்திர சொதப்பல்.

● வி. ரெங்கநாதன், ராணிப்பேட்டை.

?ஓவியர் உமாபதியின் மறைவு குறித்து...?

! நீண்ட நாட்களாக நோய்வாய்ப்பட்டிருந்தவரின் துன்பம் ஓய்ந்தது. எனினும் பத்திரிகைகளுக்கு அவர் மறைவு பெரிய இழப்பு. எளிய முறையில், கேலிச் சித்திரக்காரராக அறிமுகமாகி, பத்திரிகைத் துறையின் தேவைகளுக்கேற்ப அரசியல் கார்டூனிஸ்டாகவும் வண்ணப்பட ஓவியராகவும் தம்மை வளர்த்துக் கொண்டார். பத்திரிகைத் துறையின் அவசரம் புரிந்து ஒத்துழைப்புத் தருவதில் அவருக்கு நிகராக வேறு ஒருவரைச் சொல்ல முடியாது. எந்த பத்திரிகை அலுவலகத்திலும் வேலைக்குச் சேராமல் 'free lance' ஆகவே தன்னம்பிக்கையுடன் உழைத்து, தம்மையும் தம் குடும்பத்தையும் நிலைப்படுத்திக் கொண்டார்.

• ஜெயலலிதா



• பெரிய இழப்பு...!



ன்ன?

ராசு!



• காலத்தின் கட்டாயம்...?

## வட்டமேஜை

### ரூ. 20 பரிசு பெறும் கடிதம்

♦ "வரலாறு காணாத தேர்தல்" என்ற தலையங்கத்தைப் படிக்கும் பொழுது, தி.மு.க.-த.மா.கா. கூட்டணி அடைந்து வரும் வரலாறு காணாத வெற்றியை டீ.வி.யிலும் வானொலியிலும் கேட்டுக் கொண்டே இந்த விமர்சனத்தை எழுதுகின்றேன். ஜெ.யை நிராகரிக்க வேண்டும் என்று மக்கள் ஒருமனதாகத் தீர்மானித்து, நாம் நினைத்தது மாதிரியே தங்களுடைய பொன்னான வாக்குகளைச் சரியான நபர்களுக்கு அளித்து விட்டார்கள், மிக்க சந்தோஷம். "ஒரு முதலமைச்சர் எப்படி இருக்கக் கூடாது" என்பதற்கு ஜெ எப்படி உதாரணமாகத் திகழ்ந்தாரோ, அதே போல் இப்போது பதவி ஏற்ற கலைஞர் ஒரு நல்ல முதலமைச்சருக்கு எடுத்துக் காட்டாகத் திகழ வேண்டும். அவர் எடுத்து வைக்கக்கூடிய ஒவ்வொரு அடியிலும் சர்வ ஜாக்கிரதையுடன் இருக்க வேண்டும்.

திருச்சுழி, சுந்தர் அழகேசன்.

# எடுத்துக்காட்டாக வேண்டும் கலைஞர்!

♦ பெண்களுக்கு சுதந்திரம் கொடுக்காத ஆண்களிடமிருந்து பிரிந்து தனியே வாழ்வதில்தான் முழு சுதந்திரம் கிடைக்கும் என்பதுபோல் 'ஆனந்த சுதந்திரம்' சிறுகதை எழுதப்பட்டிருப்பது சற்று வருத்தத்தைத் தருகிறது. மாறாக, அதுபோன்ற ஆண்களுக்கு சவுக்கடி கொடுக்கும்விதமாகக் கதையைப் பின்னியிருந்தால் ஒரு நல்ல பலன் கிடைத்திருக்கும் என்பது எனது கருத்து. மற்றபடி கதை எழுதப்பட்டிருக்கும்விதம் அருமையாகவும், யதார்த்தமாகவும் இருப்பதில் சிஷ்யா அவர்களுக்குப் பாராட்டுக்கள்.

பக்கிரிப்பாளையம், சா. சேகர்தாசன்.

♦ மாணவர்களை பல்வேறு துறைகளில் அறிஞர்களாக ஆக்கும் ஓர் உண்மையான ஊழியராக நடந்து கொண்ட பச்சையப்பன் கல்லூரி முதல்வருக்கு நேர்ந்த கதி, மாணவர் சமுதாயமும் சம்பந்தப்பட்டவர்களின் பெற்றோர்களும் வெட்கப்பட்டுத் தலைகுனிய வேண்டிய ஒரு நிகழ்ச்சி.

கொப்பம்பட்டி, செ. அன்புமதி கோபிநாத்.

♦ மதம் கடந்த (இந்து) ஆலயத்தின் சுவரில் பைபிள், திருக் குர்ஆன் கருத்துக்கள் இடம்பெற்றிருந்த விஷயத்தை படித்ததும் மெய் சிலிர்த்தது.

கவுண்டம்பாளையம், பலராம்செந்தில்நாதன்.

♦ மு. கருணாநிதியின் "மலரும் நினைவுகள்" நூலை அறிமுகம் செய்யும் போது கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினரின் கேள்விக்கு முக-வின் பதிலைப் போட்டிருக்கிறீர்கள். இது கருணாநிதி மீது தவறான நல்லெண்ணத்தை ஏற்படுத்துவதாகும். காங்கிரஸ் மந்திரி சபைகள் 1946-ம் ஆண்டிலிருந்து அமுல்படுத்தி வந்த மது விலக்குக் கொள்கையை ரத்து செய்தவர் கருணாநிதிதான். கொட்டும் மழையில், ராஜாஜி அவர் வீடு தேடிச் சென்று மன்றாடியும் இணங்காமல் மதுவிலக்கை ரத்து செய்தவர் அவர். இது இன்றைய தலைமுறையினருக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. எனவே நீங்கள் வெளியிட்டுள்ளதைப் படித்து அவர்கள் தவறான முடிவுக்கே வருவார்கள்.

சென்னை - 44, எஸ். சந்திரசேகரன்.

♦ நடிகை ரோகிணியின் பேட்டி, ஒப்பனையற்ற அவரின் இன்னொரு முகத்தைக் காட்டியது. தற்போது கையில் எந்தப் படமும் இல்லையென ஒப்புக் கொண்ட ஒரே தமிழ் நடிகை இவராகத்தான் இருப்பார். வாழ்க்கை பற்றிய இவரின் சிந்தனையும், சமூகத்தின் மீதான அக்கறையும், எல்லா நட்சத்திரங்களுக்கும் இருந்து விட்டால், அவர்களின் பாப்புலாரிட்டியை வைத்து எவ்வளவோ சாதிக்கலாம் என்ற ஏக்கம் ஏற்பட்டது!

கன்னிப்பாடி, கே. ஸ்டாலின்.

♦ பரபரப்பை மையமாகக் கொண்டு விற்பனை நோக்கில் செயல்படும் பத்திரிகைகளையும், சன் டீ.வி.யையும் சந்தனக் கடத்தல் வீரப்பன் பேட்டி விஷயத்தில் தராசு ஒரு பிடி பிடித்துவிட்டது!

அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

♦ தராசுபதில்கள் பகுதியில் "பத்திரிகை ரிப்போர்ட்டிங்/டெலிவிஷன் நிகழ்ச்சிகள் ஆரோக்கியமான திசையில் திரும்ப வேண்டுமாயின் சுகன்யாவின் வழக்கு வெற்றி பெற வேண்டும்" என்று கூறியிருக்கிறீர்கள். இது உங்கள் கருத்து. ஆனால், 'சந்தன வீரப்பன் டீ.வி. பேட்டியை' ஒளிபரப்ப பல கோடிகள் கைமாறி இருக்கிறது என்று தாங்கள் கூறியிருப்பது அபாண்டமானது. வருத்தத்தையும், அதிர்ச்சியையும் அளிக்கிறது. சந்தன வீரப்பனின் டீ.வி. பேட்டியை நாங்கள் வியாபாரமாக்க விரும்பவில்லை. அவனை மக்கள் முன்னால் நிறுத்தியிருக்கிறோம். இதற்காக நாங்கள் பெருமைப்படுகிறோம்.

சென்னை - 30, ஆர்.ஆர்.கோபால், ஆசிரியர், நக்கீரன்.

**லட்சக்கணக்கான கழக உடன்பிறப்புகளுக்கு திருமதி ராணி அண்ணாதுரை அண்ணியாக இருந்தாலும், மகன்களுக்கு அவர் அம்மாதானே? இங்கே அம்மாவைப் பற்றிய தமது நினைவுகளைப் பகிர்ந்து கொள்கிறார் டாக்டர் சி.என்.ஏ. பரிமளம்...**

# 'அண்ணி'யாக வாழ்ந்த அம்மா!

கல்யாணம் நடக்கும் போது அம்மாவுக்கு வயது பதினாறு. அப்பாவுக்கு (அண்ணா) 21 வயது. இண்டர் முடித்திருந்தார். 1930ல் கல்யாணம். அம்மாவை வளர்த்தவர் மாமா சிவப்பிரகாச முதலியார். அம்மாவைப் பெண் பார்த்து விட்டுப் போனவர் அப்பாவின் தொத்தா (சித்தி) ராஜாமணி அம்மாள். 'நீங்க பார்த்து முடிவு பண்ணிடுங்க' என்று அப்பா சொல்லியிருந்தாராம். வைதீக முறைப்படிதான் கல்யாணம் நடந்தது.

1934-ல் அப்பா பெரியாரிடம் வேலைக்குச் சேர்ந்து இயக்கப் பணிகளில் தீவிரமாக இறங்கினார். காஞ்சிபுரத்தில் விறகு வாசல் தெருவில் பெரிய கூட்டுக் குடும்பமாக நாங்கள் வாழ்ந்தோம். அப்பாவின் அம்மா, அவர் அக்கா, அக்கா மகள் (இவர்தான் என்னைப் பெற்றவர்) மற்றும் தொத்தா, அம்மா. நாங்கள் நான்கு சகோதரர்கள். வீட்டில் அடுப்பு எரிந்து கொண்டே இருக்கும்.

எதிர் வீட்டில் மாடியில் அப்பாவின் நூலகமும், தம்பிமார்கள் வந்தால் தங்குமிடமும் இருந்தது. அப்போதெல்லாம் அவ்வளவாக ஹோட்டல்கள் கிடையாது. ஆக எந்த நேரத்தில் யார் வந்தாலும் டிபன், சாப்பாடு என்று உபசாரம் நடந்து கொண்டே இருக்கும். அம்மா முகம் சுளித்து நான் பார்த்ததில்லை. தமக்குத் தேவையான புடவை, பணம், நகை என்று எதையுமே அம்மா அப்பாவிடம் நேரடியாகக் கேட்க மாட்டார். வீட்டு நிர்வாகம், வரவு, செலவு என்று எல்லாமே தொத்தாதான். ஆக அம்மா அவர் மூலம்தான் தமது விருப்பத்தைச் சொல்லுவார்.

அம்மாவுக்கு நாட்டு நடப்புகள் தெரிந்தாலும் அப்பாவிடம் அதைப் பற்றிப் பேச மாட்டார். 1938-ல் இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் அப்பா சிறை சென்ற போது, 'குடியரசு' பத்திரிகையில் அப்பா வீரத்தைப் பாராட்டி,



'இவரை வாழ்க்கைத் துணைவராக அடைந்ததில் பெரும் பேறு பெற்றேன் நான்' என்று அறிக்கை கொடுத்திருக்கிறார்; போராட்டங்களில் கலந்து கொண்டு சிறைக்குச் செல்லும் போது அம்மா அங்கு அடிக்கடி சென்று அப்பாவைப் பார்த்து வருவார்.

தி.மு.க. மாநாடுகளுக்கு அம்மாவையும் அழைத்துச் செல்வார் அப்பா. 1952, மற்றும் 1962 தேர்தல்களில் அப்பாவுக்காக, காஞ்சிபுரத்தில் வீடு வீடாக வோட்டு கேட்டிருக்கிறார்

